KALKI
1.3.2007 ரூ.8.00
80 பக்கங்கள்

# கல்கி

குடும்பத்துடன் படிக்க...

ஜெயிக்கப் போவது நீங்க!

+16 இணைப்பைக் கேட்டு வாங்குங்கள்

பதற்றம்... பரவசம்... பச்சைக்கிளி!

# Team Health Shoppe For Wellness

## நீங்கள் உபயோகிப்பது சரியான ~~சோப்பு~~ தானா? க்ளீன்சர்



இன்றைய சூழலில் நாம் பயன்படுத்தும் சில குளியல் சோப்புகள் கேடு விளைவிக்கக் கூடிய ரசாயன (கெமிக்கல்) பொருட்களை கொண்டு தயாரிக்கப்பட்டு வருகின்றன.

டீம் பயோக்ளீன்சர் அத்தகைய ரசாயன பொருட்கள் இல்லாமல் உருவாக்கப்படுகிறது. இயற்கையின் நற்குணங்களை கொண்ட கற்றாழை (ஆலோ வீரா) மற்றும் தேங்காய் பால் சருமத்தை மென்மையாக உதவுகிறது.

**Aloe vera Coconut Milk Biocleanzer**



- கைவினைத் தயாரிப்புகள் மூலம் தேர்ந்தெடுக்கப்பட்ட தேங்காய் பால் மற்றும் ஆலோ வீரா
- தண்ணீருக்கு பதிலாக ஆலோவீரா ஜெல்
- தீங்கு விளைவிக்கக்கூடிய பொருட்கள் இல்லை.
- குளிர்நிலை தொழில்நுட்பம்.






## டீம் ஹெல்த் ஷாப்பின் இதர பொருட்கள்

- டீம் சோடியம் அல்லாத உப்பு
- டீம் அரை உப்பு • டீம் நல்லெண்ணெய்
- டீம் தேங்காய் எண்ணெய்
- கற்றாழை - சருமம் மற்றும் மேனிப் பராமரிப்பு பொருட்கள் •தேன் பொருட்கள்
- டீம் எனர்ஜி வாட்டர்
- மரபு முறை, கைகுத்தல் உணவுப் பொருட்கள்
- கொடைக்கானல் மலை தைலம்
- பனைப்பொருட்கள்

**NEW** Now Available

- FLAXSEED OIL
- FLAXSEED POWDER
- ORGANIC PULSES




# TEAM EUBIO CARE

(DIVISION OF CHEMFAB ALKALIS LIMITED)




**வண்டலூர்:** டீம் ஹவுஸ், ஜி.எஸ்.டி. ரோடு, சென்னை - 48. போன்: 2275 0502

**அடையார்:** எண்.26, தரைதளம், கார்பரேஷன் ஷாப்பிங் காம்ப்ளக்ஸ், 3வது அவென்யு, இந்திரா நகர், சென்னை - 20. போன்: 4269 5115

**அண்ணாநகர்:** பிளாட் 1200, Z பிளாக், 6வது அவென்யு, சென்னை - 40. (கோகினோ கராத்தே ஸ்கூல் எதிர்புறம்) போன்: 4269 3332




teamhealthshoppe@drraoholdings.com ▪ www.teamhealthshoppe.com

அடுத்த இலவச இணைப்பு...

+16 +16

# கல்கி

குடும்பத்துடன் படிக்க...

32 பக்கங்கள் ஒரே புத்தகமாக!

# இனி எல்லாம் சுகமே!

**நவீன மருத்துவ சிகிச்சை பற்றிய தகவல்கள்...**

**மருத்துவர்களின் ஆலோசனைகள்... பேட்டிகள்...**

இணைந்து வழங்குவோர்:






டாக்டர் காமாட்சி நினைவு மருத்துவமனை

சென்னை.



பிரமுகர்

மூன்று மாநிலங்களில் நடந்த தேர்தல்களில், காங்கிரஸ் இரண்டு மாநிலங்களில் தோல்வியடைந்துவிட்டது. "அடுத்து வீழப் போவது மத்திய அரசுதான்" என்று பா.ஜ.க. சந்தோஷப்படுகிறது. "இது மத்திய அர

# "மத்திய அரசுக்கு

சுக்கு விடுக்கப்பட்டுள்ள எச்சரிக்கையாக எடுத்துக்கொள்ள வேண்டும்" என்கிறார் இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் அகில இந்தியச் செயலாளரான டி.ராஜா. அவரிடம் பேசினோம்....

**பஞ்சாப், உத்ராஞ்சல் மாநிலங்களில் காங்கிரஸின் தோல்விக்கு எது காரணமாக இருந்திருக்க முடியும்?**

"முக்கியமாக விலைவாசி உயர்வு. மாநில காங்கிரஸ் அரசுகளின் தவறான அணுகுமுறை மற்றும் பொது மக்களிடம் இயல்பாகவே உருவாகிவிட்ட அரசுக்கு எதிரான மனப்போக்கு - இவைதான் தோல்விக்குக் காரணங்கள்."

**'இது மாநில அரசுக்கு எதிரான தீர்ப்பு அல்ல' என்கிறாரே பிரதமர்?**

"இருக்கக்கூடும். ஆனால், இந்தத் தீர்ப்பு மூலம் ஆளும் மத்திய அரசுக்கு மக்கள் எச்சரிக்கை மணி அடித்திருப்பதாகவே நான் கருதுகிறேன்."

**இந்தத் தீர்ப்புகளைத் தொடர்ந்து மத்திய அரசுக்கு ஆபத்து வருமா?**

"காங்கிரஸ் தனது பொருளாதார கொள்கைகளை மாற்றியமைத்துக்கொள்ள வேண்டும். உழைக்கும் மக்களின் வாழ்க்கைத் தரம் உயர வேண்டும். இல்லையேல் ஒரு கட்டத்தில் மக்களுடைய வெறுப்பு உச்சகட்டத்துக்குப் போகும்.

**மத்திய அரசின் செயல்பாடுகளால் இடதுசாரிகளின் செல்வாக்கும் சரியாதா?**

"நாங்கள் காங்கிரஸின் எந்தக் கொள்கைகளை ஆதரிக்கிறோம் அல்லது எதிர்க்கிறோம் என்று மக்கள் பார்த்துக் கொண்டுதான் இருக்கிறார்கள். எனவே எங்கள் செல்வாக்கு எந்த விதத்திலும் பாதிக்கப்படாது."

**சரி, பா.ஜ.க.வுடைய செல்வாக்கு வளர்கிறதா?**

"மத்தியில் பா.ஜ.க. அரசு இருந்தபோது

தான் பஞ்சாபில் விவசாயிகள் தற்கொலை செய்து கொண்டார்கள். அந்தக் கட்சி காங்கிரஸுக்கு மாற்றான முற்போக்கு

**"மத்திய அரசை பிடித்துவிடுவோம் என்று பா.ஜ.க. சொன்னால் அது கனவுதான்"**

கொள்கைகள் எதையும் முன் வைக்கவில்லையே! இப்போது மாநிலத் தேர்தல்களில் வென்

**மணி!"**

றதுகூட, காங்கிரஸின் தவறுகள் காரணமாகத் தான். இதை வைத்துக்கொண்டு பா.ஜ.க. 'மத்திய அரசைப் பிடித்துவிடுவோம்' என்று சொன்னால், அது கனவாகத்தான் இருக்க முடியும்."

**உ.பி. தேர்தலிலும் காங்கிரஸின் தோல்வி தொடரும் என்று கருதுகிறீர்களா?**

"அங்கு பல்வேறு கூட்டணிகள் களத்தில் இருக்கின்றன. முலாயம் ஆட்சியை எதிர்த்துப் பல போராட்டங்களை நடத்திய நாங்கள், ஜனமோர்ச்சாவுடன் உடன்பாட்டில் இருக் கிறோம். முலாயம் அரசை எதிர்ப்பவர்கள் ஒன்று சேர வேண்டும் என்று நாங்கள் நினைக்கிறோம்."

**மத்திய அரசுக்கு எவ்வளவு காலம்தான் இடதுசாரிகள் ஆதரவு தொடரும்...?**

"மதச்சார்பு சக்திகள் ஆட்சிக்கு வந்துவிடக் கூடாது என்ற அளவில் காங்கிரசுக்கு எங்கள் ஆதரவு தொடர்கிறது. அதே சமயம் எங்களுக்கு 'வேறு வழியில்லை' என்றும் காங்கிரஸ் நினைத்துவிடக் கூடாது."

- ப்ரியன்





**கல்கி**

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் :
**லக்ஷ்மி நடராஜன்**

கல்கி பில்டிங்க்ஸ், 47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
**சீதா ரவி**

தலைமை உதவி ஆசிரியர் :
**மு.மாறன்**

வடிவமைப்பு :
எஸ். ஸ்டீஃபன், பி.ஆர். ராஜன்
எம். மோகன், ச. கார்த்திகேயன்

தொலைபேசி :
2225 1522, 2225 0623, 2225 1324

தொலைநகல் :
044 - 22251021

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com

கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.440/-
ஆறு மாதம் : ரூ.220/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 65 யு.எஸ். டாலர்

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.



சர்ச்சை

# சென்னை சங்கமம்: கலை விழாவா..

ஒருபுறம் பாராட்டு, மறுபுறம் முணுமுணுப்பு; 'இது கலை விழா', 'இல்லையில்லை... கனிமொழி விழா' என்கிற வாதங்கள்; கலந்துகொள்ள அழைக்கப்படாதவர்களின் வருத்தம், அழைக்கப்பட்டும் கலந்து கொள்ளாதவர்களின் கோபம்-சென்னை சங்கமம் விழாவில் இதுபோல் பல சலசலப்புகள்... இதைப் பற்றி மக்கள் என்ன நினைக்கிறார்கள்?



• சி.கே.குமார்

## அடையாள முயற்சி!

பாலாஜி பிரசாத் (திரைப்பட இயக்குநர்): நம்ம பண்பாட்டை, கலாசாரத்தையொட்டி நடைபெற்ற கலை விழாக்கள் ரொம்ப அருமையா இருந்தன. எல்லா ஊர்கள்லருந்தும் ஏன், மத்த மாநிலத்திலிருந்து கூட இந்த நிகழ்ச்சியில கலந்துக்கிட்டதைப் பார்க்கறப்ப சந்தோஷமா இருந்தது. அடுத்த தலைமுறைக்கு நம் பழைமையை அடையாளப்படுத்தும் முயற்சி இது!



• கண்ணன்

## இவ்வளவு விஷயமா!

ஸ்ரீ தங்கலக்ஷ்மி (எஸ்.ஐ.ஜி. கல்லூரி மாணவி): ஸ்கூல், காலேஜ் விழாக்களில் பார்க்கற டான்ஸ் தவிர, வேறெதுவும் எங்களுக்குத் தெரியாது. ஆனா, இந்த சென்னை சங்கமம் மூலமா கிராமியக் கலைகளில் இவ்வளவு விஷயங்கள் இருக்கான்னு



• கே.எஸ்.கோபி



• ஸ்ரீ தங்கலக்ஷ்மி



மலைப்பு ஏற்பட்டது.

## இது தி.மு.க. விழாவா?

கண்ணன் (புகைப்படக் கலைஞர்): நிச்சயமா இது தி.மு.க. விழாவாகத் தெரியலை. கலை விழாதான். செய்யற விஷயம் நல்லா இருக்கிறப்ப பாராட்ட வேண்டியது தானே! இன்னும் கொஞ்

# கழக விழாவா?





• பாலாஜி பிரசாத்



• பி.ராஜ்மோகன்

சம் அவகாசம் கொடுத்துப் பண்ணியிருக்க லாம்.

### ரொம்ப அவசியம்!

**ஜலஜா** (குடும்பத் தலைவி): எங்க ஊர்ல சின்ன வயசுல கோயில் திருவிழாக்களில் இது மாதிரி கலை நிகழ்ச்சிகள் விடிய விடிய நடக்கும். அந்த சந்தோஷமே தனி! இப்ப பேரக் குழந்தைகளை அழைச்சுக்கிட்டு சென்னை சங்கமத்துக்குப் போயிட்டு வந்தேன். பசங்க அதைப் பார்த்துட்டு வந்து அடிச்ச லூட்டி இருக்கே, அப்பப்பா..! இந்த விழா ரொம்ப அவசியம்.

### பள்ளிகளிலும்...

**பி.ராஜ்மோகன்** (சமூக ஆர்வலர்): வருடா வருடம் இது போன்ற விழாக்கள் நடத்தப்பட வேண்டும். கூடவே 'கிராமியக் கலை களை' பள்ளி மாணவர் களிடம் நிலைநிறுத்த வழி வகை செய்ய வேண்டும்.

### இடைவெளி குறைய...

**கே.எஸ்.கோபி** (கட்சிப் பிரமுகர்): இயந்திரமயமாகிவிட்ட

### சென்னை சங்கமம் குறித்து எழுத்தாளர் இந்திரா பார்த்தசாரதி என்ன சொல்கிறார்?

இதுபோன்ற கலை விழாக் கள் வரவேற்கப்பட வேண்டியவை தான். சென்னை சங்கமமும் நன்றாக இருந்ததாகத்தான் சொல்கிறார்கள். எனக்கு அழைப்பிதழ் அனுப்பாததால் நான் போகவில்லை. எல்லா கலைஞர் களையும், எழுத்தாளர்களையும், இலக்கிய வாதிகளையும் பங்குபெறச் செய்வதற்கு வாய்ப்பு இல்லாவிட்டாலும் அழைப்பிதழாவது அனுப்பியிருக்கலாம். அங்கங்கே இது குறித்த முணுமுணுப்புகள் எழுந்துள்ளன. இதுதவிர குழு மனப்பான்மையான அணுகுமுறைகள், அழைப்பு கள் இருப்பதாகவும் குறைபடுகின்றனர்.

தொடர்ந்து இப்படிப்பட்ட விழாக்களைச் செய்யப் போகும் அமைப்புகளுக்கு ஒரு நிலையான 'செட் அப்' அவசியம். அது அக்கறையோடும், பொதுமையோடும், அனைத்துத் தரப்புகளையும் அரவணைத்துச் செல்லும் தன்மையோடும், அரசு ஆதரவோடும் செயல்பட்டால் இன்னும் சிறப்புறச் செய்ய முடியும்.

சில வருடங்களுக்கு முன் மத்திய அரசாங்கம், கலை, இலக்கிய அகாடமிகளின் செயல்பாடுகள், செலவினங்கள் மற்றும் நடைமுறைகள் குறித்த ஆய்வறிக்கை ஒன்றைக் கேட்டது. அக்சர் கமிட்டி அறிக்கை என்ற பெயரில் எங்களது ஆய்வறிக்கையைச் சமர்ப்பித்தோம். நாங்கள் சமர்ப்பித்ததில் அவர்களுக்கு எது தேவையோ அதை எடுத்துக்கொண்டு மற்றதை விட்டுவிட்டார்கள். ஏனென்றால் மக்களது வரிப்பணம் இதுபோன்ற அமைப்புகளின் மூலம் செலவிடப்படும்போது, அதற்கான வரவு செலவுத் திட்டங்கள் மக்கள்முன் வைக்கப்பட வேண்டியது அவசியம்.

சென்னை சங்கமமும் அதைச் செய்ய வேண்டும்.

சென்னை போன்ற நகரங்களில் தொலைக் காட்சி மட்டுந்தான் பொழுதுபோக்கு என்றாகிட்டது. ஓடியாடி விளையாட இடம் கிடையாது. ஒரு கிராமத்துப் பையன் சிட்டிக்கு வந்து எப்படி மலைச்சுப் போவானோ, அப்படித்தான் சிட்டி பையன் கிராமத்துக்குப் போனாலும்! இந்த இடைவெளியைக் குறைக்க இது போன்ற விழாக்கள் நிச்சயமா உதவும்.



• ஜலஜா



• எஸ்.வி.சேகர்

**முயன்றாலும்...**

**சி.கே.குமார்** (பிஸினஸ்மேன்): கனிமொழி என்றில்லை, யார் இதற்காக முயற்சி செய்தாலும் இந்த அரசு நிச்சயம் உதவியிருக்கும். ஏனென்றால் கலையிலும், இலக்கியத்திலும் ஆர்வமுடையவர் நம் முதல்வர். ஜெயலலிதா ஆட்சியென்றால் கொஞ்சம் தாமதமாகியிருக்கும் அவ்வளவுதான். அவரும் உலகத் தமிழ் மாநாட்டை நடத்தியவர்தான்.

**மைலாப்பூர் தொகுதி எம்.எல்.ஏ., எஸ்.வி. சேகர் :**

வருஷத்தில் ஒரு முறை கலைஞர்களைக் கூட்டி விழா எடுப்பதனால் கலை வளர்ந்துவிடாது; கலைஞர்களின் நிலைமையும் மாறிவிடாது. கிராமியக் கலைஞர்களுக்கு வாழ்வளிக்க வேண்டுமென்றால், அந்தந்த கிராம விழாக்களில் கிராமியக் கலை நிகழ்ச்சிகள் நடத்தப்பட வேண்டும்; அரசு விழாக்களில் இடம்பெற வேண்டும். சென்னை சங்கமத்துக்குச் சுமார் ஐந்து கோடி ரூபாய் செலவழித்திருப்பதாகச் சொல்கிறார்கள். ஆனால், இதில் பங்குபெற்ற கலைஞர்களின் வாழ்வாதாரம் கேள்விக்குறியாகத்தானே இருக்கிறது!

கூரையேறி கோழி பிடிக்காதவன், வானம் ஏறி வைகுந்தம் போன கதையாகத்தான் இருக்கிறது- இன்றைய கிராமியக் கலையின் நிலையும், கலைஞர்களின் வாழ்வும்.

## மக்கள் கருத்து மற்றும் எண்ணங்கள் குறித்து கனிமொழி என்ன நினைக்கிறார்?

"கிராமங்களில் மட்டுமே புழங்கி வந்த கிராமியக் கலைகளை, நகரத்தின் தெருக்களுக்குக் கொண்டு வந்து சேர்த்தது மிகவும் மகிழ்ச்சியாக உள்ளது.

இந்த நிகழ்ச்சி தொடர்ந்து நடைபெற ஏதுவாய் ஓர் அமைப்பை, வழிமுறைகளை உருவாக்க ஆலோசித்து வருகிறோம். இந்த முறை குறைந்த அவகாசமே இருந்ததால் ஏற்பட்ட சிற்சில குறைபாடுகள் எங்களுக்கும் தெரியும்.

சென்னை சங்கமத்துக்காக எந்த நிதியும் ஒதுக்கப்படவில்லை. சுற்றுலா பண்பாட்டுத் துறை, கலைஞர்களுக்குத் தங்க இடம், ஒருங்கிணைப்பு போன்ற உதவிகளை மட்டுமே செய்தது. இது குறித்து சுற்றுலாத் துறைச் செயலாளர் இறையன்பு ஏற்கெனவே அறிக்கை தந்துள்ளார். தனியார் நிறுவனங்கள் விளம்பரதாரர்களாகி நிதி உதவி செய்தன.

நான் பங்கேற்றதால் மட்டுமே இந்த நிகழ்ச்சிக்கு சிறப்புக் கூடியது என்று நான் நினைக்கவில்லை. இதில் ஆர்வமுடன் செயல்பட்ட தமிழ் மையம், பண்பாடு மற்றும் சுற்றுலாத்துறை, கலைஞர்கள், ஆர்வலர்கள் என இன்னும் பெயர் தெரியாத பலபேருக்கு கிரடிட் போய்ச் சேரவேண்டும்!"

**- அருணா செந்தில்**

படங்கள்: **பொள்ளாச்சி சுந்தரம்**



பிரச்சனை

# "வீரப்பன் மனைவியிடம்

**ரா**ஜீவ் காந்தி கொலையாளிகளான சிவராசன், சுபா இருவரும் தமிழ்நாட்டிலிருந்து தப்பி பெங்களூர் சென்றது முதல், அவர்களது மரணம் வரையிலான நாட்களில் நடந்த சம்பவங்களை வைத்து, கன்னடத்தில் 'சயனைடு' (தமிழில் குப்பி) என்ற படத்தை எடுத்தவர் ரமேஷ். 'அடுத்து வீரப்பனைப் பற்றி ஒரு சினிமா எடுக்கப் போகிறார்; அதில் வீரப்பனின் மனைவி முத்துலட்சுமி நடிக்கப் போகிறார்' என்று தகவல் வந்த சூட்டோடு சூடாக முத்துலட்சுமி, "வீரப்பன் கதையைப் படம் எடுக்க நான் யாருக்கும் அனுமதி தரவில்லை. அதை நானே திரைப்படமாக எடுப்பேன். மீறி யாரேனும் படம் எடுத்தால், மான நஷ்ட வழக்குப் போடுவேன்" என்று கூறி சர்ச்சையைக் கிளப்பி இருக்கிறார். வீரப்பனைப் பற்றிப் படம் எடுக்கப் போவதாக அறிவித்துள்ள ரமேஷிடம் பேசினோம்.

"**நா**ன் 'சயனைடு' படம் எடுப்பதற்கு முன்பே வீரப்பனைப் பற்றிப் படம் எடுக்கும் எண்ணம் எனக்கு இருந்தது. அவன் கன்னட சூப்பர் ஸ்டாரான ராஜ்குமாரைக் கடத்திச் சென்றபோதும், மந்திரி நாகப்பா கடத்திச் செல்லப்பட்டுக் காட்டிலேயே கொலை செய்யப்பட்டபோதும் கர்நாடகாவில் நடந்த சம்பவங்களை உற்றுக் கவனித்தவன் நான். போலீஸ் என்கவுன்ட்டரில் அவன் கொல்லப்பட்ட போதே, வீரப்பனைப் பற்றிப் படம் எடுக்க வேண்டும் என்று உறுதி கொண்டுவிட்டேன்."

**ராஜீவ் காந்தி படுகொலை விஷயத்தில், சர்ச்சைகளிலிருந்து ஒதுங்கிக் கொலையாளிகள் பெங்களூரில் கழித்த நாட்களைப் பற்றி மட்டும் படம் எடுத்தீர்கள். வீரப்பன் கதையை எப்படி எடுக்கப் போகிறீர்கள்?**

"வீரப்பனின் வாழ்க்கையில் மிகவும் முக்கியமான சம்பவங்கள் என்று நான் நினைப்பது, ராஜ்குமாரைக் கடத்திச் சென்றதும், என்கவுன்ட்டரில் அவன் கொல்லப்பட்டதும்தான். எனவே, இவை இரண்டையும் ஒட்டித்தான் படத்தின் ஸ்கிரிப்ட் தயாராகியுள்ளது."

**வீரப்பனைப் பற்றிப் படம் எடுக்க முத்துலட்சுமியிடம் அனுமதி வாங்கினீர்களா?**

"நான் வீரப்பன் சம்பந்தபட்ட பலரையும் நேரில் சந்தித்து ஏராளமான தகவல்களைத் திரட்டிய பிறகே திரைக்கதை எழுத ஆரம்பித்தேன். அந்த விதத்தில்தான் நான் முத்துலட்சுமியைச் சந்தித்தேனேயொழிய, அவரிடம் பர்மிஷன் கேட்பதற்காக இல்லை. வீரப்பனைப் பற்றிப் படம் எடுப்பதற்கு முத்துலட்சுமியிடம் எதற்கு அனுமதி கேட்க வேண்டும்? நான் 'சயனைடு' படம் எடுத்த போது சோனியா காந்தியிடம் பர்மிஷன் கேட்டுக்கொண்டா எடுத்தேன்? வீரப்பன் மீது என்கவுன்ட்டரை நடத்திய அதிரடிப் படைத் தலைவர் விஜயகுமாரையும்கூட நான் சந்தித்துப் பேசினேன். ராஜ்குமார்

கடத்தப்பட்டபோது நடந்த சம்பவங்களைப் பற்றி அறிந்துகொள்ள கர்நாடகக் காவல் துறை அதிகாரிகள் பலரைச் சந்தித்தேன்."

**முத்துலட்சுமி நடிக்க வேண்டும் என்று கேட்டீர்களா?**



• முத்துலட்சுமி

# "ஏன் கேட்க வேண்டும்?"

"ஆமாம். வீரப்பனின் மனைவி கேரக்டரில் நீங்களே நடிக்கும்படிக் கேட்டபோது, அவர் மறுக்காமல் சம்மதித்தார். சம்பளம் பற்றிப் பேச்சு வந்தபோது, 'நாலைந்து நாட்கள்தான் உங்களுக்கு ஷூட்டிங் இருக்கும். ஐம்பதாயிரம் ரூபாய் முதல் ஒரு லட்சம் வரை தர முடியும்' என்றேன். அவரது முக பாவத்திலிருந்து இன்னும் அதிகம் எதிர்பார்க்கிறாரோ என்று தோன்றியது. 'நான் எடுக்கப்போவது டான்ஸ், பாட்டு எல்லாம் இருக்கும் பெரிய பட்ஜெட் கமர்ஷியல் படமில்லை' என்று கூறினேன். மற்றபடி அவர் பத்திரிகைகளில் சொல்லியிருப்பதைப்போல 'என்னை அவர் திட்டினார்'

• இயக்குநர் ரமேஷ்

என்பதெல்லாம் துளியும் உண்மையில்லை."

**வீரப்பனைப் பற்றி சினிமாவோ, டி.வி. சீரியலோ எடுக்கத் தடை பெற்றிருப்பதாக முத்துலட்சுமி சொல்கிறாரே?**

"வீரப்பனின் வாழ்க்கைக்கு யாரும் காப்பிரைட் கொண்டாட முடியாது. வீரப்பன் என்ன செய்தான், எப்படி வாழ்ந்தான், அவன் முடிவு என்ன என்பது உலகம் அறிந்த விஷயம். நான் கற்பனை சேர்த்து, அவனை பெரிய ஹீரோவாகவும் காட்ட மாட்டேன்; அவன் பெயரைக் களங்கப் படுத்த வேண்டும் என்பதும் எனது நோக்கமல்ல. வீரப்பனைப் பற்றிப் புலனாய்வு செய்து பத்திரிகைகள் எவ்வளவு எழுதி இருக்கின்றன! அதுபோல நடந்த உண்மைகளை, யதார்த்தமாகத் திரையில் சொல்லப் போகிறேன், அவ்வளவுதான். எனவே, கருத்துச் சுதந்திரத்துக்கு யாரும் தடை போட முடியாது."

**- எஸ்.சந்திரமௌலி**



கல்வி




சென்னை ஆலோசனைக் குழு...

# கை கொடுக்கும்

**ம**ளிகைக் கடையில் வேலை பார்க்கிறவரின் மகன், மருத்துவம் படிக்க முடியுமா? முடியும்.

நெசவுத் தொழிலாளியின் மகன் இன்ஜினீயரிங் கல்வி பெற முடியுமா? முடியும்.

'சோஃபியா ஸ்காலர்ஷிப்' பெற முடிந்தால் இந்த இரண்டும் சாத்தியம்தான்!

'சோஃபியா' என்ற கிரேக்கச் சொல்லுக்கு அறிவு அல்லது ஞானம் என்று பொருளாம். அறிவு இருந்து, பொருள் இல்லாதவர்க்கு மேற்படிப்புப் படிக்க கைகொடுக்கிறது சோஃபியா ஸ்காலர்ஷிப்.

**க**மலாம்பிகா ஆரம்பப் பள்ளியிலும், திருவாரூர் போர்டு ஹைஸ்கூலிலும் நன்றாகப் படித்துவிட்டு, கல்லூரியில் சேர்ந்து கல்வி கற்க வழிவகை இல்லாத நிலையில், யாரோ ஒருவர் உதவிக்கு வந்து, கும்பகோணத்தில் ஒரு சத்திரத்தில் தங்கிப் படித்து, பிறகு கிண்டி இன்ஜினீயரிங் கல்லூரியில் எலக்ட்ரிக்கல் இன்ஜினீயரிங்கும், பெங்களூர் இண்டியன் இன்ஸ்டிடியூட் ஆஃப் சயன்ஸில் ஹை வோல்டேஜ் பவர் பிரிவில் மாஸ்டர்ஸ் பட்டமும் பெற்ற முத்துராமன் எஸ்.ஐயர் விதைத்த வித்துதான் சோஃபியா ஸ்காலர்ஷிப் திட்டம்.

"நான் அமெரிக்காவில் பணிபுரிந்த பெக்டெல் கார்ப்பரேஷன், என்னுடைய 32 ஆண்டுப் பணியைப் பாராட்டி ஒரு கணிசமான தொகையைக் கொடுத்த போது, என் ஆரம்ப நாட்களில் எனக்கு உதவியவர்களை எண்ணிப் பார்த்தேன். என்னைப்போல படிப்பில் சிறந்து, பொருளாதாரத்தில் பின்தங்கி இருக்கும் மாணவ, மாணவிகளுக்கு ஐந்தாண்டு கால மருத்துவப் படிப்புக்கும், நான்காண்டு கால இன்ஜினீயரிங் கல்விக்கும் நிதி உதவி செய்யத் தீர்மானித்தேன். நான் சத்திரத்தில் தங்கிப் படித்த நினைவு வந்த போது, மாணவ, மாணவியரின் கல்விச் செலவுக்கு மட்டும் உதவினால் போதாது, அவர்களின் ஹாஸ்டல் விடுதிக் கட்டணத்துக்கும், உணவுக்கும் சேர்த்தே

## முத்துராமன்

கொடுக்க வேண்டும் என்று முடிவெடுத்தேன்!" என்கிறார் முத்துராமன்.

இப்படித்தான் 1999-ல் பிறந்திருக்கிறது சோஃபியா ஸ்காலர்ஷிப்.

முத்துராமன், மனைவி கீதா, பிள்ளைகள் அனைவரும் அமெரிக்காவின் கலிஃபோர்னியாவில் வசித்தாலும், இந்தியாவில் இயங்கும் ஆலோசனைக் குழு, ஒவ்வோர் ஆண்டும் தகுதியான மாணவ – மாணவியரைத் தேர்ந்தெடுக்க அவர்களுக்கு உதவுகிறது.

செப்டெம்பர் மாத முதல் வாரத்தில் 'ஹிந்து' நாளிதழில் விண்ணப்பங்களை வரவேற்று விளம்பரம் கொடுக்கிறார்கள். இந்தியாவின் பல மாநிலங்களில் இருந்தும் பெறப்படும் விண்ணப்பங்களை அலசி ஆராய்ந்து, அவர்கள் குடும்பப் பின்னணியைப் பற்றி உறுதியாகத் தெரிந்து கொண்டு முழுப் படிப்புக்கும் உதவித் தொகை வழங்குகிறார்கள். மத, இன வேறுபாடு எதையும் பார்ப்பதில்லை. இதுவரை அறுபதுக்கும் மேற்பட்ட இளைஞர்கள் சோஃபியா ஸ்காலர்ஷிப் பெற்றிருப்பதோடு, சிறப்பாகப் படித்து முடித்து வேலையில் சேர்ந்து செழித்துக் கொண்டிருக்கிறார்கள்!

"நான் வேலையில் சேர்ந்ததும், வசதியற்ற பிறருக்கு உதவ உங்களைப் போலவே முடிவெடுத்திருக்கிறேன்!" என்று ஒவ்வொரு சோஃபியா மாணவரும், மாணவியும் கடிதம் எழுதியிருப்பதுதான் இந்தத் திட்டத்துக்குக் கிடைத்த வெற்றி.

சென்னையிலும் சோஃபியா ஸ்காலர்ஷிப் திட்டத்தைத் தொடங்கி வைத்த 'ஹிந்து' முரளி, இந்த நிகழ்ச்சியில் பங்கு கொள்வது தமக்கு நெகிழ்ச்சியான அனுபவத்தைத் தந்தது என்றார்.

# சோஃபியா!



• இந்து முரளியிடம் உதவித் தொகை பெறும் மாணவர் சந்திரமோகன்...

அமெரிக்காவில் சோஃபியா ஸ்காலர்ஷிப்பின் அருமையை உணர்ந்து, பலரும் தங்கள் பங்களிப்பைத் தர முன் வந்திருக்கிறார்களாம். "இந்திய அமைப்புக்கும் நிச்சயம் ஆதரவு கிடைக்கும்!" என்கிறார் அறங்காவலர்களில் ஒருவரான ஆர்.டி.சாரி.

**- சாருகேசி**



...மாணவி வினிதா



ஆணிகள் பதித்த வழக்கமான ஸ்போர்ட்ஸ் ஷூக்களை அணிந்து கொண்டு ஓடினால், நேரு உள் விளையாட்டரங்கத்தின் செயற்கை ஓட்டப்பந்தயப் பாதை பாழாகிவிடும் என்பதால் 'ஒன்று வேறு ஷூக்கள் அணிந்து ஓடு அல்லது வெறும் காலுடன் ஓடு' என்று சொல்லி விட்டார்கள். நான் சில நிமிடங்கள் என்ன செய்வது என்று புரியாமல் நின்றேன். கடைசியில், நான் அணிந்திருந்த ஷூக்களைக் கழற்றி என் நண்பனிடம் கொடுத்துவிட்டு, வெறும் காலுடன் ஓடினேன். ஷூ விஷயத்தில் அப்செட் ஆனதால் என்னால் ஓட்டத்தில் கவனம் செலுத்த முடியவில்லை; தோற்றுப் போனேன். ஆனால்; அடுத்து நானூறு மீட்டர் பந்தயத்தில் நண்பனின் ஷூவோடு கலந்து கொண்டேன். எனக்குத்தான் வெற்றி!

பத்தாவது 'கேம்பிரிட்ஜ் வித்யாலயா' மெட்ரிக்குலேஷன் பள்ளியில் சேர்ந்தேன். அங்கே படித்துக் கொண்டிருந்தபோது, பாதி வருடத்தில் என்னை திடீரென்று டைபாய்டு ஜுரம் தாக்கியது. இரண்டு, மூன்று வார காலம் என்னால் பள்ளிக்கூடத்துக்குப் போக முடியவில்லை. மொத்தத்தில் பத்தாம் வகுப்பு படிப்பு எனக்கு ஒரு சோதனைக் காலமாகவே இருந்தது. பொதுத் தேர்வு எழுதினேன். ரிசல்ட் வந்தது. என் தேர்வு எண்ணை அச்சிட பேப்பர்காரர்கள் மறந்து விட்டார்கள். மறுபடி சின்சியராகப் படித்து பாஸ் பண்ணினேன்.

அடுத்து நான் அப்பாவிடம் 'கம்ப்யூட்டர் அனிமேஷன் படிக்க விரும்புகிறேன்' என்று சொன்னதும் உடனே 'ஓகே' சொன்னார். ஒரு தனியார் கம்ப்யூட்டர் பயிற்சி நிறுவனத்தில் சேர்ந்து மல்டி மீடியா, அனிமேஷன் எல்லாம் கற்றுக்கொண்டேன். அந்த அறிவு

# என் சோதனைக் காலம்!

9

மற்றும் அனுபவத்தின் அடிப்படையில், சூப்பர் குட் ஃபிலிம்ஸ் தயாரிக்கும் படங்களின் விளம்பர டிசைனிங்கை கவனித்துக் கொண்டேன்.

அந்தச் சமயத்தில்தான் 'ஆசை ஆசையாய்' படத்தில் நடிக்கும் வாய்ப்புக் கிடைத்தது. என்னுடைய முதல் படம் ரிலீஸ் ஆவதற்கு முன்னதாகவே எனக்கு இரண்டாவது படத்தில் நடிக்க வாய்ப்பு வந்தது. அதற்குக் காரணம் என் அப்பாதான். 'நீ வெளி கம்பெனி படங்களில் நடிப்பதற்கு முன்பாக சூப்பர் குட் தயாரிப்பில் மூன்று படத்திலாவது நடிக்க வேண்டும். அந்த நடிப்பு அனுபவம் உன்னை ஒரு முழுமையான, நல்ல நடிகனாக மாற்றும். வர்த்தக ரீதியில் பெரிய அளவில் வெற்றி பெறாமல் போனாலும் பரவாயில்லை. நாமே இரண்டாவது படத்தையும் எடுக்கலாம். நல்ல கதையைத் தேர்ந்தெடுத்தவுடன் ஷூட்டிங் ஆரம்பித்து விடலாம்'' என்றார்.

அடுத்த படத்தைப் பற்றி யோசிக்கையில் 'மனசந்தா நுவே' என்ற தெலுங்குப் படம் என் அப்பாவின் நினைவுக்கு வந்தது. 'அந்தப் படத்தைத் தமிழில் எடுத்தால் என்ன?' என்று கேட்டார். இரண்டு வருடங்களுக்கு முன்னால் எங்கள் வீட்டில் எல்லாருமாக திருப்பதிக்குப் போயிருந்தோம். அப்போது ஒரு தெலுங்குப் படம் பார்க்க வாய்ப்புக் கிடைத்தது. அதுதான் 'மனசந்தா நுவே'. அதாவது 'மனசு முழுவதும் நீயே' என்று அர்த்தம். அந்தப் படம் எங்கள் எல்லாருக்குமே பிடித்திருந்தது (அப்போது நான் சினிமாவில் நுழையவில்லை என்பது குறிப்பிடத்தக்கது). அந்தப் படத்தைத் தமிழில் எடுக்க உரிமை வாங்கப்பட்டது.

அடுத்து படத்துக்கு யார் டைரக்டர் என்ற கேள்வி எழுந்தது. என்னுடைய முதல் படத்தைப் போலவே, இரண்டாவது படத்துக்கும் ஒரு புதிய இயக்குனரையே போடலாம் என்றார் என்னுடைய அப்பா. 'சொந்தத் தயாரிப்பான இரண்டாவது படத்திலும் ஒரு புதிய இயக்குனரைப் போட வேண்டுமா? வேறு யாராவது பிரபலமான டைரக்டரைப் போட்டால் நன்றாக இருக்குமே?' என்று நான் அப்பாவிடம் கேட்டேன்.

(பேசுவேன்)



# கல்கி



2007 மார்ச் 11
விய மாசி 27
மலர் : 65
இதழ் : 32

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - பாரதியார்.

## கட்டெறும்பு காங்கிரஸ்!

பஞ்சாப் தேர்தலில் அம்மாநில நிதியமைச்சராக இருந்த சுரிந்தர் சிங்லா, பா.ஜ.க. வேட்பாளர் சித்துவிடம் தோற்றுப் போயிருக்கிறார். இத்தனைக்கும் சித்து மீது கொலை வழக்குத் தொடரப்பட்டு, அவர் அக்குற்றத்துக்காக தண்டனையும் விதிக்கப் பெற்றவர்!

பஞ்சாப் மக்களுக்கு காங்கிரஸிடமும் அதன் பொருளாதாரக் கொள்கையிடமும் சிறிதும் நம்பிக்கை இல்லை என்பதையே இது உணர்த்துகிறது.

பஞ்சாபிலும் சரி, உத்தரகாண்டிலும் சரி, காங்கிரஸ் வேட்பாளர்கள் கணிசமான வாக்குகள் வித்தியாசத்தில் தோற்றுப் போயிருக்கிறார்கள்.

ஒரு காலத்தில் தேசிய கட்சியாக, நாட்டின் நான்கு திசைகளிலும் வலுவாக இருந்த காங்கிரஸ், இன்றைக்கு விரல் விட்டு எண்ணக்கூடிய மாநிலங்களில்தான் ஆட்சியில் இருக்கிறது.

இதற்கான காரணங்களை ஆராய்ந்து சீர்திருத்த நடவடிக்கைகளை எடுக்காவிட்டால், கட்டெறும்பாகத் தேய்ந்து போயிருக்கும் காங்கிரஸ், சில ஆண்டுகளுக்குள் காணாமலே போய்விடும்.

நேரு குடும்பத்தினரின் தலைமைக்காக மட்டுமே இனிமேல் வோட்டு விழாது என்பது தெளிவாகிவிட்டது. கட்சியின் தலைமைப் பொறுப்பை வகிக்கும் சோனியா காந்தி, இவ்வுண்மையை ஏற்று, கட்சியின் கட்டமைப்பை பலப்படுத்துவதுடன், அதன் கொள்கைகளையும் மறுபரிசீலனைக்குட்படுத்தி, மாற்றங்களைக் கொண்டுவர வேண்டும்.

பஞ்சாப் முதல்வராக விளங்கிய அமரிந்தர் சிங், 'எடுத்தேன் கவிழ்த்தேன்' என்று ஆட்சி நடத்தியிருக்கிறார். பழிவாங்கும் நடவடிக்கை, அண்டை மாநிலத்துடனான நதி நீர்ப் பகிர்வு






ஒப்பந்தத்தை அப்பட்டமாக மீறுதல் என்று ஆட்சிக்கும் கட்சிக்கும் அவப்பெயர் தேடிக் கொண்டிருக்கிறார். உத்தரகாண்ட் முதல்வரோ, தமக்கு வயதாகிவிட்டது; ஆட்சிப் பொறுப்பில் நீடிப்பது கஷ்டம் என்று வெளிப்படையாகவே புலம்பியிருக்கிறார்!

காங்கிரஸ் தலைமை, உட்கட்சி ஜனநாயகத்தைக் கடைப்பிடித்து சட்டமன்றத் தலைவரைத் தேர்ந்தெடுத்திருந்தால், இதுபோன்ற குளறுபடிகள் நிகழ்வதற்கான வாய்ப்புகள் குறைவு. கட்சித் தலைமையின் ஆசி மட்டும் இருந்து, தொண்டர்கள் மற்றும் சட்டமன்ற உறுப்பினர்களின் முழு ஒத்துழைப்பு இல்லையென்றால், ஒரு முதல்வர் சிறப்பாகச் செயல்பட முடியாது. தனிநபர் ஆளுமைக்குத் தரப்படும் வெற்று முக்கியத்துவத்தைக் களைந்து, உட்கட்சி ஜனநாயகத்தை காங்கிரஸ் ஏற்றாக வேண்டும்.

மாநில அளவில் மட்டுமின்றி மத்திய ஆட்சி அளவில் எடுக்கப்படும் முடிவுகளும் கடைபிடிக்கப்படும் கொள்கைகளும்கூட காங்கிரஸின் வெற்றி வாய்ப்புகளைப் பாதித்துத் தோல்விக்கு வழிவகுத்துள்ளன. காங்கிரஸ் தரப்பில் இதை அவசரமாக மறுத்தாலும், நாடு தழுவிய விலைவாசி உயர்வுதான் அதன் இமேஜை மிக அதிகமாகக் காயப்படுத்தி யிருக்கிறது.

"பண வீக்கம் மிக அதிகமாக இருப்பது கவலை தருகிறது. அதைக் கட்டுப்படுத்தியாக வேண்டும்" என்று மத்திய நிதியமைச்சரே பேசி என்ன பயன்? 'ஒரு கண்ணுக்கு வெண்ணெய், மறு கண்ணுக்குச் சுண்ணாம்பு' என்பதுபோல், மத்திய அரசு ஐ.டி. கார் உற்பத்தித் துறைகளுக்கு ஏகப்பட்ட சலுகைகள், வரி விலக்குத் தந்துவிட்டு, பிற நிறுவனங்களுக்கு வரிச் சுமையை ஏற்றுகிறது. வரி கூடுவதால் வரி ஏய்ப்பும் கூடி, கறுப்புப் பணப் புழக்கத்துக்குக் காரணமாகிறது. ஐ.டி. துறையின் சம்பள விகிதங்களும் அதில் குவியும் லாபமும் ஏகப்பட்ட பணப் புழக்கத்துக்குக் காரணமாகின்றன. இதனால், ஒரு பிரிவினர் மட்டுமே வசதி கூடி ராஜபோகமாய் வாழ, பிறர் அன்றாடச் செலவுகளைச் சரிக்கட்டவே அவஸ்தைப்படுகின்றனர்.

இந்தியாவில் பெரும்பான்மை மக்கள் மேற்கொண்டுள்ள விவசாயத் தொழில் மீதும் அதைச் சார்ந்த பிற தொழில்கள் மீதும் கவனம் திருப்பி, ஆதரவு அளித்து, அவை பெருகி உணவுப் பற்றாக்குறையும் வேலையில்லாத் திண்டாட்டமும் தீர வேண்டும். காங்கிரஸின் கொள்கையும் செயல்பாடும் இத்திசை நோக்கித் திரும்பினாலேயொழிய அக் கட்சிக்குக் கதிமோட்சம் இல்லை! ●





✉ ஜனநாயகத்துக்குப் பங்கம் விளையும்போதெல்லாம் தட்டிக் கேட்பதில் அங்கம் வகிப்பது, கல்கியின் தலையங்கம்.

லோயர் அணைக்கட்டு, பி.இராஜேந்திரன்

✉ சலனம் நீக்கும் சக்தியாய் விளங்கும் திருவண்ணாமலை ஸ்ரீ அபிதகுஜாம்பாள் அம்மனின் திருக்கோலக் காட்சியை கண் முன் நிறுத்தி அசர வைத்த விதம் அற்புதம்.

எரகுடி, ஆர். இராஜேஸ்வரி

✉ கடைசி பக்க எஸ்.எம்.எஸ். ஜோக்குகளை முதலில் படித்ததால் சிரித்துச் சிரித்து கண்களில் கண்ணீர் வர, மற்ற பக்கங்களை உடனே படிக்க முடியவில்லை.

செல்வபுரம், என்.கௌரி

✉ தென்னாங்கூர் பாண்டுரங்கனைப் பற்றிப் படித்து பரவசத்தில் ஆழ்ந்துவிட்டேன்!

சென்னை, ஜே.துரைராஜி

✉ தம்பதிகளுக்கிடையே ஈகோவினால் நிகழும் பிணக்கினை கன கச்சிதமாக இந்திரா பார்த்தசாரதி உணர்த்தியிருந்தார், தமது 'பொன் விழா'வில்

நெய்வேலி, சு.இந்துமதி

✉ மாறுபட்ட தலைப்பிலமைந்த 'பத்து விரல் பாட்டி' சிறுகதை, உழைப்பின் உன்னதத்தையும், தன்னம்பிக்கையின் அவசியத்தையும் இயல்பாய் உணர்த்தியது.

போடிநாயக்கனூர், எஸ்.எம்.பாலசுப்ரமணியன்

# நிறைவு தந்த விழா!

✉ எழுபத்துமூன்று வயது இளைஞர் டிராஃபிக் ராமசாமியின் முயற்சிகளும், போராட்டங்களும் ஆச்சர்யப்பட வைக்கின்றன.

திருப்பூர், பா.சு.மணிவண்ணன்

✉ 'கண்ணீர் வியாபாரிகள்' கட்டுரையில் சின்னத்திரையினரின் கருத்துக்கள் சரியாக இருந்தது. குறைகளை ஏற்றுக்கொள்ள வைத்த கல்கியின் முயற்சிக்குப் பாராட்டுகள்.

பாளையங்கோட்டை, கே.மோகனசுந்தரம்

✉ இந்திரா பார்த்தசாரதியின் 'பொன்விழா' சிறுகதை 'முழுமை பெற்ற காதலெல்லாம் முதுமை வரை ஓடி வரும்' என்ற பாடல் வரியின் நல்விளக்கமாக அமைந்திருக்கிறது. படித்த சிலர் (பலர்?) தொலைத்துவிட்ட உண்மைக் காதல், சகிப்புத்தன்மை, விட்டுக்கொடுக்கும் மனப்பான்மை, மேலான புரிந்துணர்வு ஆகியவற்றின் அவசியத்தை ஏற்கத் தக்க வகையில் மிகவும் இதமாகச் சொல்கிறது கதை! நிறைவு தந்த விழா... பொன்விழா!

ஸ்ரீரங்கம், வி.சௌரிராஜன்




# ஸமயக் கட்டுரை எப்படி எழுதலாம்?




**அபிராமியும் லலிதாவும்- மீனாட்சிசுந்தரம் மோகன்**

அபிராமி அந்தாதியின் அருஞ் சொற்பொருள் கூறி, அதே பொருளுடன் கூடிய வரிகளை ஸ்ரீ லலிதா சஹஸ்ரநாமம், லலிதா திரிசதி, ஸௌந்தர்யலஹரி, திருமூலர் திருமந்திரம் போன்றவற்றிலிருந்து எடுத்து ஒப்பீடு செய்யும் நூல். பக்தி கலந்த உழைப்பு.

***ஸ்ரீ அபிநவ பாஸ்கர டிரஸ்ட் வெளியீடு, பிரதிகள் கிடைக்குமிடம்: புது எண் 18, பழைய எண்.2, நந்தனம் விரிவு II.ஆவது தெரு, சென்னை - 600 035, தொ.பே. 24350162, விலை ரூ.250/-***

**கடவுள் என் சிறந்த நண்பர் - சுவாமி சுத்தானந்தா**

அண்மையில் கல்கியில் வெளியான சுவாமி சுத்தானந்தாவுடைய உரைகளின் தொகுப்பு (மொழி பெயர்ப்பு: சிவசங்கரி). 'தன்னை அறிய' முற்படுவோர் தேடிப் படிக்க வேண்டிய புத்தகம்.

***வானதி பதிப்பகம், 23, தீனதயாளு தெரு, சென்னை - 17, விலை ரூ.60/-***

தரிசனம் - ரா.கணபதி

ஏற்கெனவே பிரசுரமான இந் நூலாசிரியரின் வேறு சில நூல்களின் ஒருங்கிணைப்பு - சில புதிய கட்டுரைகளுடன். கதைகளும் இதிலே இடம்பெற்றுள்ளன! ஸமயக் கட்டுரை எழுதுவது எப்படி என்று ஆலோசனைகளும் உண்டு!

**திவ்ய வித்யா ட்ரஸ்ட், ஃபிளாட் 6, எண் 22, கில்**




**கிறிஸ்ட் அவென்யூ, சென்னை - 600 031, விலை ரூ.250/-**

**முருகன்- திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள்**

புராணக் கதைகளாக இல்லாமல் முருகனைப் பற்றிய அனைத்துக் கேள்விகளுக்கும் விடை அளிக்கக்கூடிய தகவல்களின் தொகுப்பு. அறுபடை வீடுகள், முருகனின் பல்வேறு பெயர்களைப் பற்றிய குறிப்புகள் அடங்கிய சிறு புத்தகம்.

**குகஸ்ரீ வாரியார் பதிப்பகம், 107, சிங்கண்ண தெரு, சிந்தாதிரிப்பேட்டை, சென்னை - 600 002. தொலைபேசி 28416666, விலை ரூ. 21/- இணைய தளம்: wwwvariyar swamigal.com**








தலைமைச் செயலகம்

# நாம் எப்படிச் சிந்திக்கிறோம்?

**மா** என்றால் அம்மா. தை என்றால் அத்தை. ஊ என்றால் பூனை. ஏன் இப்படி என்று கேட்கக்கூடாது. மழலை மொழிக்கு இதுவரை யாரும் நிகண்டுகள் தயாரித்தது கிடையாது. எந்தப் பரிமேலழகரும் இதுவரை குழந்தைகளுக்கு உரை எழுதியதில்லை. ஒரு குழந்தைக்குப் பூ என்றால் பொம்மை. மற்றொரு குழந்தைக்கு பூ என்றால் யானை.

ஒரே ஒரு குட்டிச் சிரிப்பு போதும். அல்லது ஒரு குட்டிச் சிணுங்கல். அல்லது ஒரு கொஞ்சல் பார்வை. செய்வதை அப்படி அப்படியே போட்டுவிட்டு ரசிக்க ஆரம்பித்துவிடுகிறோம்.

சரி, அந்தக் குழந்தை எதற்காகச் சிரிக்கிறது? யாரைப் பார்த்து? நம்மையா? ஏன்? திடீரென்று ஏன் கண்களை விரித்து அழகாக விழிக்கிறது? நாம் யார் என்று அதற்குத் தெரியுமா? பிறக்கும்போதே அதன் குட்டியூண்டு மண்டையில் ஏதாவது விஷயம் இருக்குமா? அல்லது துடைத்து வைத்த சிலேட் போல் ஃப்ரெஷ்ஷாகப் பிறந்து, நாள்பட நாள்பட கற்றுக் கொள்ளுமா?



தொன்று தொட்டு இந்தச் சந்தேகங்கள் தொடர்ந்து கொண்டிருக்கின்றன.

பேபி லேப் (Baby lab) என்னும் பெயரில் ஒரு குழு அமெரிக்காவில் செயல்பட்டு வருகிறது. கடந்த ஒரு வருடமாக நூற்றுக்கும் மேற்பட்ட குழந்தைகளை வைத்துச் சில ஆராய்ச்சிகளைச் செய்து வருகிறார்கள். மம்மம் ஊட்டிக் கொண்டே, விளையாட்டு காட்டிக் கொண்டே குழந்தைகளை உட்கார வைத்து, அவர்களிடமிருந்து நோட்ஸ் எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். எப்படிச் சாப்பிடுகிறார்கள்? எப்போது அழுகிறார்கள்? எப்போது கலகலக்கிறார்கள்? இன்ன பிற.

இன்னமும் ஒரு வயது ஆகவில்லை அந்த ரோஸ் நிறக் குட்டிக்கு. உட்கார வைத்து டி.வி.யை ஆன் செய்கிறார்கள். திரையில் ஒரு பொம்மை ட்ரெய்ன். நீல நிறம். மெதுவாகச் சுற்றிச் சுற்றி வளைந்து வளைந்து செல்கிறது. 'அட' என்று நிமிர்ந்து உட்கார்கிறது அந்தக் குழந்தை.

விடாமல் தன் பார்வையால் வண்டியைப் பின்தொடர்கிறது. இடையில் ஒரு குகை. உள்ளே சென்றதும் வண்டி மறைந்து விடுகிறது. குழந்தையின் கண்களில் பதைபதைப்பு. தேடல். எதிர்பார்ப்பு.

மீண்டும் மீண்டும் இந்தக் காட்சி ஒலிபரப்பப்பட்டபோது, அந்தக் குட்டிக்கு போர் அடிக்க ஆரம்பித்துவிடுகிறது. அடுத்து ட்ரெயினின் கலரை சிவப்பாக மாற்றுகிறார்கள். மீண்டும் ஆர்வத்துடன் கவனிக்க ஆரம்பிக்கிறது. கலரை மாற்றாமல் நான்கு ரவுண்ட் ஓடவிட்டால் தலையைத் திருப்பிக் கொள்கிறது.

குழந்தைகளுக்கு கலர் தெரியுமா? இந்த ட்ரெயினைப் பார்க்கும்போது அந்தக் குழந்தை எப்படிச் சிந்தித்தது?



மூளையின் செயல்பாட்டை பல நூற்றாண்டுகளாகத் தொடர்ந்து படித்துக் கொண்டிருக்கிறார்கள். இந்த நூற்றாண்டின் சாதனை, மூளையைச் சிறுசிறு பாகங்களாக வகுத்து, ஒவ்வொன்றுக்கும் பெயர் வைத்ததே. தவிரவும், எந்தப் பாகம் என்ன செய்கிறது என்று தோராயமாக அறிந்துகொள்ள முயன்றது.

ஓவியம் வரைவதற்கும் கட்டுரை எழுதுவதற்கும் ஒரு குறிப்பிட்ட ஏரியா காரணம் என்று வைத்துக்கொண்டால், அந்த ஏரியா எங்கே முடிவடைகிறது, அடுத்த ஏரியா எங்கே ஆரம்பிக்கிறது என்ற துல்லியமாகச் சொல்ல முடியவில்லை. ஏரியா என்றாலே எல்லைத் தகராறு இருக்கும் போலும்! ஓர் ஏரியாவில் பிரச்னை என்றால், அடுத்த ஏரியாவும் பாதிப்புக்கு உள்ளாகிறது.

ஆக, இந்த ஏரியா பிரச்னைக்கு முற்றுப்புள்ளி வைத்தால்தான் மற்றொரு முக்கிய கேள்விக்கு விடை காண முடியும். அந்தக் கேள்வி இதுதான்: நாம் எப்படிச் சிந்திக்கிறோம்? மருத்துவர்களும், மனோதத்துவ நிபுணர்களும் ஒன்றிணையும் புள்ளி இது.

பதினெட்டு மாதங்கள் ஆகும்போது ஒரு குழந்தை தனக்கான ஒரு பிரத்யேக உலகத்தை உருவாக்கிக் கொள்கிறது. அந்த உலகத்தில் பூச்சாண்டி இருக்கும். நான்கு கண்களோ, ஐந்து கண்களோ அல்லது அதற்கு மேலோ இருக்கும். பெரிய கோணிப்பை வைத்திருக்கும். சமர்த்துக் குழந்தைகளை மட்டும் விட்டுவிட்டு பிறரை இலாகவமாகப் பிடித்துக் கொண்டு போகும். பொம்மைகள் பேசும். சண்டை போடும். கிண்டல் செய்யும்.

மூன்று வயது பூர்த்தியாகும்போதுதான் நிஜ உலகம் அவர்களுக்குக் கொஞ்சம் கொஞ்சமாகப் புரிய ஆரம்பிக்கிறது. பூச்சாண்டிக்கு இரண்டு கண்கள்தான் இருக்கும் என்று யோசிக்க ஆரம்பிப்பார்கள். பூச்சாண்டி ஒரு பம்மாத்து வேலை என்று புரிந்துகொள்ள ஒரு குழந்தைக்கு எட்டு ஆண்டுகள் தேவைப்படும்.

இவையெல்லாம் கொசுறு போல் நமக்குக் கிடைத்த தகவல்கள் மட்டுமே. மர்மம் இன்னமும் விடுபடவில்லை. அதுவரை, குழந்தைகளை வைத்த கண் வாங்காமல் ரசிக்க வேண்டியதுதான். ○



சுஜாதா

# விழுங்கினவனை விழுங்கினேன்!

**ம**துரைக்குப் பக்கத்தில் உள்ள அழகர் மலையின் பழைய பெயர் திருமாலிருஞ்சோலை. நம்மாழ்வார் திருவாய்மொழியில் இதன் பெருமானைப் பற்றிப் பல பாசுரங்களைப் பாடியிருக்கிறார். அவற்றில் எதை எடுத்தாலும் வியப்பளிக்கும், தமிழ் கொஞ்சும் உதாரணம்...

பேரே உறைகின்ற பிரான் இன்று வந்து,
பேரேன் என்று, என் நெஞ்சு நிறையப் புகுந்தான்;
கார் ஏழ், கடல் ஏழ், மலை ஏழ், உலகு உண்டும்
ஆரா வயிற்றானை அடங்கப் பிடித்தேனே.

பிரபஞ்சத்தை முழுவதும் விவரிக்க முடியாது. அதன் விஸ்தாரத்தை எளிமையாகச் சொல்ல ஏழு கடல், ஏழு மலை, ஏழு உலகங்கள் என்று உருவகப்படுத்துவது பண்டைய வழக்கம். Seven seas என்று படித்திருப்பீர்கள். இப்படி ஏழு ஏழாக அடுக்கி, அவை அனைத்தையும் கிருஷ்ணன் சிறு குழந்தையாக இருக்கும்போது உண்டவர் என்று ஒரு கதை சொல்வார்கள். யசோதை 'வாயைத் திற' என்று அதட்டிக் கேட்டதில் அந்தத் தாய்க்கு - தொண்டைக்குள் ஏழு உலகங்களையும் காட்டி ஓர் அதிர்ச்சி தந்தாராம்!

எப்படி ஒரு சிறு குழந்தையால் அத்தனை பெரிய உலகை உண்ண முடியும் என்று வியப்பாக இருக்கும். இந்தத் தத்துவத்தின் உட்பொருள் கடவுள், பிரபஞ்சம் அனைத்தையும் தனக்குள் அடக்கியவர் என்பது. இந்தப் பரந்து விரிந்த



போது கடவுள் எல்லையற்றவராயினும் பக்தியின் எல்லைக்குள் அகப்படுவார் என்கிறார்.

பேரே உறைகின்ற - பெயர் பெற்ற ஊரில் உள்ள பிரான் இன்றைக்கு வந்து உன்னை விடமாட்டேன் என்று என் நெஞ்சை நிரப்பிவிட்டான். ஏழு மேகங்கள், ஏழு கடல்கள், ஏழு மலைகள், ஏழு உலகங்களைச் சாப்பிட்டும் ஜீரணிக்காத வயிற்றுள்ளவனை அடங்கப் பிடித்தேனே!

'கடவுள் உலகை உண்டார்; கடவுளை நான் உண்டேன்' என்கிறார்.

'நான் உன்னையன்றி இலேன் கண்டாய் நாரணனே நீ என்னை அன்றி இலை' என்பது வைணவத்தின் முக்கியமான கருத்து. இத்தப் பாடலை ஏ.கே.ராமானுஜன் அருமையாக ஆங்கிலத்தில் மொழிபெயர்த்திருப்பதைப் படிக்கும்போது, முந்தாநாள் எழுதிய கவிதைபோலத் தொனிக்கிறது!

My lord
who lives in the city
of names
came here today
said he'd never leave
entered me
filled my heart

I've caught him
the big-bellied one
not content yet
with all that guzzling
on the sevenfold clouds
the seven seas
the seven mountains
and the world that holds them all

I've caught him
I contain him now.

(படிக்கலாம்)



# மீண்டும் பின்லேடன்!

ஜி.எஸ்.எஸ்.

அமைதிக்கான முயற்சிகளைக் குலைக்கும் விதமாக சம்ஜோதா எக்ஸ்பிரஸில் வெடிகுண்டுத் தாக்குதல்கள் நடந்துள்ளன.

என்னதான் கட்டுப்படுத்தப்பட்டாலும் தீவிரவாதம் ஆங்காங்கே தலைகாட்டிக் கொண்டுதான் இருக்கிறது.

'ஆப்கான் எல்லைக்குள் அல்கொய்தா தீவிரவாதிகள் மீண்டும் துளிர்க்கத் தொடங்கி இருக்கிறார்கள். பாகிஸ்தான் எல்லைக்குள் இருந்தபடிதான் இந்த எல்லை மீறும் அபாயம் அரங்கேறுகிறது' என்று சமீபத்தில் கூறியுள்ளது அமெரிக்க உளவுத்துறை.



நவம்பர் தேர்தலுக்கு முன் 'அல்கொய்தா தப்பி ஓடிக்கொண்டு இருக்கிறது. நாம் வெற்றியின் விளிம்பில் இருக்கிறோம்' என்றார் புஷ்.

ஆனால், இப்போது பாகிஸ்தானின் மலைப் பகுதியில் மீண்டும் பின்லேடன், தான் குழுத் தலைவர் என்ற அந்தஸ்தை நிலைநாட்டி வருகிறார். தளபதியின் பயிற்சி வகுப்புகள் வேகம் எடுத்துள்ளன. வழக்கம்போல பின்லேடன் இதில் நேரடியாகப் பங்கேற்கவில்லை' என்கிறது.

இதன் காரணமாக தாலிபன்களும், பாகிஸ்தானிய தீவிரவாதிகளும் மீண்டும் ஆப்கானிஸ்தானில் முற்றுகையிடத் தயாராகி வருகின்றனர்.

முஷாரஃப் மீது வெளிப்படையாக குற்றம் சுமத்தாமல், தீவிரவாதிகளுக்குப் பாகிஸ்தான் ஆதரவு அளிப்பதை எப்படிக் கண்டிக்கலாம் என்று யோசிக்கிறது புஷ் அரசாங்கம். இதற்காக அமெரிக்க ஜனாதிபதியின் மூத்த தீவிரவாத எதிர்ப்பு ஆலோசகரான பிரான்செஸ் டவுன்செட் என்பவர், ஆப்கானிஸ்தானிலுள்ள பாதுகாப்பு அதிகாரிகளைச் சந்தித்து இருக்கிறார். 2005 ஜூலையில், லண்டன் தாக்குதலில் ஈடுபட்ட மனித வெடிகுண்டுகளில் ஒருவர், வெளிப்படையாகவே அல்கொய்தாவில் தமக்குள்ள பிடிப்பை ஒப்புக்கொண்டிருக்கிறார்; இருவர் லண்டன் தாக்குதலுக்கு முன் பாகிஸ்தான் சென்று வந்துள்ளது தெரிய வந்திருக்கிறது.

2006ல் பின்லேடனும் அவன் தளபதியும் 21 அறிக்கைகளை வெளியிட்டிருக்கிறார்கள். அதற்கு முன் ஆண்டு கிட்டத்தட்ட இதில் பாதியளவு அறிக்கைகள்தாம் வெளிவந்தன. இதுவே பின்லேடன் மீண்டும் தலையெடுத்திருப்பதற்கு சான்று என்கிறார்கள்.

அல்ஜீரியாவில் சமீபத்தில் சில கார்கள் வெடிகுண்டினால் தகர்க்கப்பட்டன. இதற்கும் அல்கொய்தாதான் காரணம் என்கிற கருத்தும் உண்டு.

மொத்தத்தில் தாலிபனும் பின்லேடனும் ஓரம்கட்டப்பட்டு விட்டார்கள் என்பது இப்போதைக்குப் பொருத்தமில்லாத செய்தியாகிவிட்டது. ஆப்கானிஸ்தான் இன்னும் என்னென்ன சோதனைகளைத் தாங்க வேண்டி வருமோ!



சிறப்புச் சிறுகதை

# எட்டாறு

எட்டாறு என்றதும் ஏதோ தமிழ்நாட்டில் ஓடும் ஆறு என்றோ, நதி என்றோ நினைக்க வேண்டாம். அது என்னுடன் ஏழாவது படிக்கும் என் நண்பன் கணேசகுமாரின் பட்டப்பெயர். காரணப் பெயர் என்றுகூடச் சொல்லலாம். ஏனென்றால் நாங்கள் அப்படி அழைப்பதற்கு ஒரு காரணம் இருந்தது.

ஒருமுறை கணக்கு வாத்தியார் ஆறாம் வாய்ப்பாட்டை ஒப்புவிக்கச் சொன்னார். ஓராறு ஆறு... ஈராறு பன்னிரண்டு என்று சொல்லிக்கொண்டு வரும்போது கணேசகுமாருக்கு எட்டு ஆறில் தடுமாற்றம் வந்தது. அவனும் தடுமாறித் தடுமாறி திக்கித் திக்கி எட்டாறு... எட்டாறு என்று நாலைந்து தடவை சொல்லிவிட்டு நாற்பத்தெட்டு என்ற விடை தெரியாமல் விழித்தான்.

வகுப்பில் நாங்களெல்லாம் விழுந்து விழுந்து சிரித்தோம். ஆசிரியர் எங்களை அதட்டி அமைதியாக இருக்கச் செய்துவிட்டு, அவனிடம் இதமாக எட்டு ஆறு நாற்பத்தெட்டு என்று சொன்னார்.

அவனும் எட்டு ஆறு நாற்பத்தெட்டு என்று சொன்னான். "சரி, திரும்பவும் ஓராறில் இருந்து சொல்" என்றார் ஆசிரியர்.

கணேசகுமார் மீண்டும் ஓராறு என்று ஆரம்பித்து ஏழாறு நாற்பத்திரண்டு வரை வந்துவிட்டான்.

எட்டாறு வந்தவுடன் வேகமாக போகிற பஸ் சடன் பிரேக் போட்ட மாதிரி எட்டாறு... எட்டாறு என்று திக்க ஆரம்பித்துவிட்டான்.

இந்த முறை நாங்களெல்லாம் சிரிக்கவில்லை. ஆனால், கணக்கு வாத்தியார் நடேசன் சிரித்துவிட்டார்.

அடுத்த முறையும் முயற்சி பண்ணிப் பார்த்தார். எட்டாறில் கணேசகுமார் மீண்டும் பிரேக் போட்டுவிட்டான். ஆசிரியர், கோபமாய்த் தலையில் ஒரு குட்டு குட்டி மீண்டும் சொல்லச் சொன்னார்.

தலையைத் தேய்த்தவாறே கணேசகுமார் இந்த முறை ஏழாவது வரைக்கும் வேகமாகச் சொல்லிவிட்டு, எட்டாறு என்று சொல்லாமல் அழத் தொடங்கிவிட்டான்.

கணக்கு வாத்தியாரும் அவனைச் சமாதானப்படுத்தி ஆறாம் வாய்ப்பாட்டைப் பத்துத் தடவை இம்போசிஷன் எழுதச் சொல்லிவிட்டார்.

மறுநாள் எங்கள் வகுப்புக்கு வந்த ஆசிரியர்,

"டேய்... எங்கடா அந்த எட்டாறு..." என்று அழைக்க, எல்லோரும் சிரித்தோம்.

வாத்தியார் எங்களையெல்லாம் அதட்டிவிட்டு அவனுடைய நோட்டை வாங்கிப் பார்த்தார்.

"சரி, இப்போ ஆறாம் வாய்ப்பாட்டைச் சொல்..." என்றார்.

கணேசகுமாரும் ஆறாம் வாய்ப்பாட்டை 'ஓராறு ஆறு' என்று ஆரம்பித்து ராகமாய்ப் படித்தான். எட்டாறில் கொஞ்சம் வேகம் குறைந்தாலும் சரியாகச் சொல்லிவிட்டு தொடர்ந்து பதினாறாறு தொண்ணூத்தாறு வரை சொல்லி நிறுத்தினான்.

நடேசன் சார் அவனைத் தோளில் தட்டிக் கொடுத்து 'சபாஷ்' என்று சொல்லி உட்காரச் சொன்னார்.

ஆனால், அந்தச் சம்பவத்துக்குப் பின் அவனை எல்லாரும் செல்லமாகவும் விளையாட்டாகவும் எட்டாறு என்று அழைக்க ஆரம்பித்தோம்.

முதலில் கோபப்பட்ட

அவன், பின்னர் அதை சகஜமாகவே எடுத்துக் கொண்டான். எங்கள் வகுப்பில் பல பையன்களுக்குப் பட்டப் பெயர் உண்டு. அந்த வகையில் கணேசகுமாரின் பட்டப்பெயர் எட்டாறு ஆகிப்போனது.

நானும் அவனும் ஒன்றாம் வகுப்பிலிருந்து ஐந்து வரை எலிமென்ட்ரி ஸ்கூலில் ஒன்றாய்ப் படித்தோம். அவன் வேண்டுமென்றே எலிமென்ட்ரி ஸ்கூல் என்று சொல்வதற்குப் பதிலாக 'எலி முண்டற' ஸ்கூல் என்பான். அவனுக்கு ஜோக் சொல்வதாய் நினைப்பு. பள்ளிக் கூடத்தில் எலிகளும் கொஞ்சம் இருந்தன.



சாயங்காலம் விளையாடுவது பக்கத்துத் தோப்பில் மாங்காய் பறிப்பது, புளியந்தோப்பில் கல் எறிந்து புளியம்பழம் பொறுக்குவது என்று எங்களுக்கு நிறைய பொழுதுபோக்குகள் இருந்தன.

நீச்சல்கூட நாங்கள் இருவரும் ஒன்றாகத்தான் கற்றுக் கொண்டோம்.

தினமும் அவனுடைய தாத்தாதான் எங்களை அழைத்து வருவார். ஊருக்கு மேற்கே ஆற்றைத் தாண்டி இருக்கும் நாயக்கர் தோட்டத்துக் கிணறுதான் நாங்கள் நீச்சல் கற்றுக்கொண்ட கிணறு.

நாங்களும் இரண்டு மூன்று மாதங்கள் சுரைக்குடுக்கையைக் கட்டிக்கொண்டு குதித்தோம். எங்கே சுரைக்குடுக்கை அவிழ்ந்துவிடுமோ என்ற பயத்தில் ஒரு கையைக் கயிற்றில் அவ்வப்போது தொட்டுப் பார்த்துக்கொள்வோம்.

பட்டாளத்தில் வேலை செய்யும் கணேசகுமாரின் மாமா, விடுமுறையில் வந்தார்.

அவரும் எங்களுடன் தினமும் காலையில் குளிக்க வருவார்.

''சுரைக்குடுக்க இல்லாமல் எப்போ நீச்சலடிக்கப் போறீங்க?''

''இன்னும் கொஞ்ச நாள் கழிச்சி...'' என்று இருவருமே பதில் சொன்னோம்.

மறுநாள் காலை, நாங்கள் மூன்று பேரும் குளிக்கப் போனோம். கிணற்றில் தண்ணீர் மேல் திட்டு வரை இருந்தது. கணேசகுமாரும் நானும் உள்ளாடையுடன் சுரைக்குடுக்கை கட்டிக்கொள்ள ஆயத்தமானோம்.

அப்போது கணேசகுமாரின் மாமா அவனை ''சுரைக்குடுக்கை இல்லாமலே குளிக்கலாம் வா'' என்று இழுத்தார்.

அவன் பயந்துகொண்டு ''வேண்டாம் மாமா... வேண்டாம் மாமா...'' என்று பின்னால் நகர்ந்தான்.

அவர் அவனை வலுக்கட்டாயமாகக் கிணற்றுக்குள் தள்ளிவிட்டு அவரும் பின்னாலேயே குதித்தார்.

கணேசகுமார் கையையும் காலையும் உதைத்துக்கொண்டு மேலே வந்து 'ஆ... ஊ...' என்று கத்தினான்.

## அடுத்த மகிழ்ச்சி!

'ஏர்டெல் சூப்பர் சிங்கர்' என்று தமிழக அளவில் சூப்பர் குரல் தேடியதில், இறுதியாகத் தேர்வு செய்யப்பட்ட நிகில் மேத்யூவுக்கு ஹாரிஸ் ஜெயராஜ் இசையில் சினிமாவில் பாடும் வாய்ப்புக் கிடைத்தது. இப்போது அடுத்த மகிழ்ச்சியை நோக்கி அடியெடுத்து வைத்துள்ளது விஜய் டீ.வி. 6 முதல் 14 வயதுள்ள வாண்டுகளுக்காக சூப்பர் சிங்கர் ஜூனியர் போட்டியை நடத்துகிறது.

கிளாசிகல், செமி கிளாசிகல், நாட்டுப்புறப் பாடல், தனித்திறன் என்று நான்கு பிரிவுகளிலும் திறமை பரிசோதிக்கப்படும்.

கோவை, திருச்சி மற்றும் சென்னையில் நடக்கும் முதல் சுற்றுகளில் தலா பதினைந்து பேர் வீதம் மொத்தம் நாற்பத்தைந்து பேர்கள் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். நிகழ்ச்சிக்கு நடுவர்கள் பிரபல திரைப்படப் பாடகிகள் சித்ரா மற்றும் உஷா உதுப்!

இறுதியில் தேர்வு செய்யப்படும் ஏர்டெல் சூப்பர் ஜூனியருக்குப் பரிசு என்ன தெரியுமா?

ஐந்து லட்ச ரூபாய்!

- கௌதம்



அவருடைய தோளைப் பிடிக்க முயற்சி செய்தான்.

"சுரைக்குடுக்கை கட்டியிருக்கறதா நெனச்சுக்கிட்டுப் படிக்கட்டுக்குப் போ" என்று விரட்டினார்.

அவனும் கையை, காலை ஆட்டிக் கொண்டு படிக்கட்டில் போய் உட்கார்ந்தான். அவன் கண்களில் பயம், முகத்தில் சிரிப்பு இரண்டும் இருந்தன. அவனுடைய மாமா என்னையும் குதி என்று சொல்லி உற்சாகப்படுத்தினார்.

"இங்கே பார்.. உன் ஃப்ரெண்ட் தானே குதிச்சிட்டு மேல வந்துட்டான். நீயும் சுரைக்குடுக்கை இருக்கறதா நெனச்சுக்கிட்டு குதி" என்றார். நான் தயங்கினேன். அவரே மேலே வந்து, 'என் கையைப் பிடி' என்றார். சொன்ன வேகத்தில் தாமதிக்காமல் என் கையை பிடித்து இழுத்துக் கொண்டு கிணற்றில் குதித்தார். 'தொபுக்கடீர்' என்று சப்தம்தான் கேட்டது. நான் கீழே போய்க் கொண்டிருந்தேன். 'சுரைக்குடுக்கை இருக்கிறதா நெனச்சுக்கோ...' என்று அவர் சொன்னது நினைவுக்கு வந்தது. அப்படியே நினைத்துக்கொண்டு கையைக் காலை ஆட்டிக்கொண்டு மேலே வந்தேன்.

சுரைக்குடுக்கை இல்லாமல் நீந்தக் கற்றுக் கொண்ட பின் மற்ற எல்லா விளையாட்டுகளும் எங்களுக்குத் துச்சமாக இருந்தது.

பள்ளிக்கூட நேரம் போக, தூங்கும் நேரம் போக மீதி நேரம் கிணற்றில் குளிப்பதிலேயேக் கழிந்தது.

கிணற்றுக்குள்ளேயே தொடுகிற விளையாட்டு வைத்தோம். ஒருவன் 'ரெடி' என்று சொல்லிவிட்டு கிணற்றில் குதித்து விட வேண்டும். அடுத்தவன் பின் தொடர்ந்து குதித்து, முன்னால் குதித்தவனைத் தொட வேண்டும். அவன் வேகமாக நீந்திப் படியேறிவிட்டால் ஜெயித்த மாதிரி.

அன்றைய தினம் நானும் எட்டாறும் வழக்கம்போல குளிக்கப் போனோம். 'கிணற்றில் நாலைந்து மட்டு (ஒரு மட்டு -ஐந்தேகால் அளவு தண்ணீர் இருக்கும்) குளித்து விட்டு மேலேறுவதற்குள் கிணற்றின் அடிவரை போய் தரையிலிருந்து ஒரு பிடி மண்ணோ, கல்லோ எடுத்து வர வேண்டும்' என்று சொன்னேன்.

எட்டாறும் அதற்குச் சம்மதித்தான். அதற்கு முன்னரும் நாங்கள் அப்படிச் செய்திருக்கிறோம்.

அன்றைய தினமும் அவ்வாறே முடிவு செய்தோம். 'நான் முதலில் போய் மண் எடுத்து வருகிறேன்' என்றேன். அவனும் 'சரி' என்றான்.

அவன் 'ரெடி' சொன்னான். நான் உடனே தண்ணீருக்குள் மூழ்கித் தண்ணீரை மேலே தள்ளியவாறு கொஞ்ச தூரம் போனேன். பின்னர் உடலை வில் மாதிரி வளைத்துத் தலையைக் கீழ்ப்பக்கம் திருப்பிக் கையைப் பறித்தவாறும், காலை உதைத்துக் கொண்டும் போனேன்.

காது லேசாக அடைத்தது. கீழே போய் நன்றாக விழித்துப் பார்த்த போது தரை தெரிந்தது. மெதுவாக வலக் கையில் கொஞ்சம் மண்ணை அள்ளினேன். சேறும் சிறு கல்லும் கிடைத்தன.

அப்படிக் காலைத் தரையில் அழுத்தியதில், வலக்கால் கிணத்தடியில் இருந்த சகதியில் சிக்கிக் கொண்டது. மேற்கொண்டு அழுத்தினால் எடுக்க முடியாத அளவுக்குக் கால் சிக்கிக் கொள்ளும் என்று எண்ணினேன். மூச்சு எவ்வளவு நேரம் பிடிக்க முடியும் என்று தெரியவில்லை. அதனால், காலைக் கீழே அழுத்தாமல், பாதத்தை வலப் பக்கமும் இடப் பக்கமும் அசக்கினேன். மண் இளகிக் கால் விடுபட்டது.

பின்னர் காலையும் உதைத்துக் கொண்டு நீர் மட்டத்துக்கு வந்தேன். கால் கீழே சிக்கிக் கொண்ட பயத்தில் கையிலிருந்த மண்ணும் தண்ணீரில் கரைந்து விட்டது.

மேலே வரும்போது ஒன்று மட்டும் என் நினைவில் தோன்றியது. எட்டாறிடம்... "டேய் கீழே போகாதே சேறும் சதியுமா இருக்கு... கால் சிக்கிக்கிச்சின்னா மேலே வர முடியாது" என்று சொல்லி அவனைத் தடுத்துவிட நினைத்தேன்.

மூச்சுப் பிடித்து ஒரு வழியாகத் தண்ணீருக்கு மேலே வந்தபோது மூச்சிரைத்தது. எதுவும் பேச முடியவில்லை.

நான் மேலே வந்துவிட்டதைப் படியில் நின்றுவாறு பார்த்த எட்டாறு "நான் போய் மண் எடுத்துக்கிட்டு வர்றேன்..." என்று சொல்லியவாறே தண்ணீரில் குதித்து விட்டான்.

"டேய் போகாதடா..." என்று கத்தினேன். அது அவன் காதில் விழவில்லை.

என்னை பயம் தொற்றிக்கொண்டது. ஒரு நீண்ட மூச்சை இழுத்துக்கொண்டு நான் மீண்டும் தண்ணீருக்குள் மூழ்கினேன். எப்படியாவது எட்டாறின் தலை முடியைப் பிடித்து மேலே இழுத்துக் கொண்டு வந்துவிட நினைத்தேன்.

உடனே கீழே போய் முயற்சி செய்தேன். அவனுடைய தலைமுடியைத் தொட முடியவில்லை; வேகமாக நீருக்குள் போய்விட்டான். என்னாலும் அதற்கு மேல் மூச்சுகட்ட முடியவில்லை.

எப்படியும் ஒரு நிமிடத்தில் வந்து விடுவான் என்று நினைத்தேன். வரவில்லை. மேலும் சில நொடிகள் கடந்தபோது என்னை பயம் கவ்விக் கொண்டது.

"யாராவது வாங்களேன்... எட்டாறு தண்ணீரில் மூழ்கிட்டான்..." என்று பெருங் குரலில் சப்தமிட்டு கிணற்றிலிருந்து மேலே ஏறி ஓடினேன்.

வயலில் வேலை செய்துகொண்டிருந்த ஏழெட்டு பேர் ஆண்களும் பெண்களுமாக ஓடி வந்தார்கள்.

ஒரு ஆள் வேகமாக கிணற்றில் குதித்தார். சற்று நேரம் கழித்து மேலே வந்தார்.

"எங்கப்பா... மூழ்கினான்..."

''கட் அவுட், பேனர்லாம் வச்சு நம்ம தலைவரை ஐஸ் வைக்க முடியாது.''
''ஏன்?''
''அவருக்குத்தான் எழுதப் படிக்கவே தெரியாதே!''
- மு.செந்தில் குமார்



நான் அழுது கொண்டே நடுக்கிணற்றைக் காட்டினேன்.

"கண்ணுல படலையேப்பா..."

மூழ்கிய நபர் முடியாமல் மேலே வந்தார். எட்டாறு மேலே வரவில்லை... வரவேயில்லை.

அவனுடைய அம்மா தலையிலடித்துக் கதறியவாறு வந்தார்கள்.

''என்னப்பா ஆச்சு.. என் பிள்ளைக்கு...'' என்று என்னிடம் கேட்டார்கள்.

எனக்கு என்ன சொல்வதென்று தெரியவில்லை. பயம். நானும் அழுதேன். நாயக்கர் மோட்டார் போட்டு நீரை வெளியேற்றினார். நீர் மட்டம் விரைவாகக் குறையாததால், மேலும் ஒரு மோட்டார் பொருத்தி நீரை வெளியேற்றினார்கள்.

நான்கு மணி நேரம் கழித்து எட்டாறை நாலைந்து பேர் மேலே தூக்கி வந்தார்கள்.

வயிறு உப்பியிருந்தது. கை கால் விடைத்திருந்தது. பயத்தோடு பார்த்த கண்கள். களத்து மேட்டில் வைக்கோல் பரப்பி விரித்த போர்வையின் மேல் உடலை வைத்தார்கள். ஏதேதோ முதலுதவி செய்து பார்த்தார்கள். பலனில்லை.

அம்மா என்னுடைய கண்களை மூடி தனியே அழைத்துப் போனார்கள்.

யாராவது என்னைத் திட்டுவார்கள் என்று பயத்தில் நானும் அழுதேன்.

"கூடப் பொறந்தவன் மாதிரி எப்பவும் ஒன்னாவே இருப்பியே ராசா..." என்று எட்டாறின் அம்மா என்னைக் கட்டிக் கொண்டு அழுதார்.

அன்று மாலை, அவனை மயானத்தில் எரித்து மறுநாள் பால் தெளித்ததாக அம்மா சொன்னார்கள். எனக்கு மந்திரித்துத் தாயத்து கட்டி விட்டார்கள்.

நான் பயந்த மாதிரி யாரும் என்னைத் திட்டவோ, அடிக்கவோ இல்லை. பள்ளிக்கூடத்துக்கு அன்று விடுமுறை விட்டார்கள்.

வகுப்பில் பையன்கள் 'எட்டாறு எப்படி இறந்தான்?' என்று கேட்பார்கள். என்னால் சரியான பதில் சொல்ல முடிந்ததில்லை. தோன்றியவற்றையெல்லாம் சொன்னேன். என்ன நடந்தது என்பதை சொல்லவேயில்லை.

எட்டாறின் அம்மா என்னைப் பார்க்கும்போதெல்லாம் எனக்கும் அவனுக்கும் பிடித்த கடலை மிட்டாயும், குஸ்பரியும் வாங்கிக் கொடுக்கிறார்கள். நான் மறுத்தாலும் சாப்பிடச் சொல்லி அழுகிறார்கள். எனக்கும் அழுகை வரும். எட்டாறு மாதிரி எனக்கு நெருக்கமாய் வேறு நண்பர்கள் இல்லை. நான் இப்போதெல்லாம் கிணற்றுக்கு குளிக்கப் போவதில்லை.

எப்போதாவது நடு ராத்திரியில் எட்டாறு என்னிடம், 'ஏண்டா... கீழ போகாத, போனா சேத்துல கால் சிக்கிரும்னு என்கிட்ட சொல்லலே? நீ சொல்லியிருக்கலாமேடா'ன்னு என்னை அதட்டிக் கேக்குற மாதிரி இருக்குது.

நான் "டேய், நான் சொல்லணும்னுதான் மேலே வந்தேன். மூச்சு வாங்கிக்கிட்டு சொல்றதுக்குள்ள நீ குதிச்சிக் கீழே ரொம்ப தூரம் போயிட்டேன்னு..'' சொல்றேன்.

நான் சொல்றது அவனுக்குக் கேட்குமா...? பயத்தில் அம்மாவை கட்டிப் பிடித்துக் கொண்டு அழுகையோடு தூங்கி விடுகிறேன். ●





விமர்சனம்

ரொம்ப நாளைக்கப்புறம் ஒரு நேர்த்தியான படம் பார்த்த திருப்தி. அடிதடி, குத்துப் பாட்டு, ஆபாச நகைச்சுவைன்னு எந்த இம்சையும் தலைகாட்டாத ரொம்ப ரொம்ப மென்மையான சினிமா. காது கேட்காத, வாய் பேசாத ஜோதிகாவுக்கும் மியூசிக் டைரக்டர்கிட்ட வேலை பார்க்கற பிருத்விராஜுக்குமான காதல் எப்படிக் கைகூடுதுங்கறதுதான் கதை. அதுக்குக் கொடுத்த திரைக்கதை வடிவம்தான் பிரமிக்க வைக்குது. ஜோவுக்கு நிகர் ஜோதான்! ரொம்பச் சவாலான பாத்திரத்தை 'ஜஸ்ட் லைக் தட்'- ஊதித் தள்றாங்க. கண்களாலேயும் உணர்வுகளாலேயும் கவிதை எழுதறாங்க. பிருத்வி மேல கோபப்படும்போது யப்பா... யன்னா எக்ஸ்ப்ரஷன்!

அழகான காதலன் பிருத்வி. ஜோ மீதான தன்னோட லவ், இரக்கப்பட்டு வந்ததில்லைன்னு நிரூபிக்கத் துடிக்கும்போது அசத்தறார். நண்பனோட சேர்ந்து பண்ற லொள்ளும் ரசிக்க வைக்குது. பிரகாஷ்ராஜ், பிரமாதராஜ். அவர் பண்ற அலம்பல்ல தியேட்டரே கதி கலங்குது. வரிக்கு வரி சிரிப்புத் தாண்டவமாடுது. சொர்ணமால்யா, எம்.எஸ்.பாஸ்கர்னு ஒவ்வொருத்தரும் அர்த்தம் பொதிஞ்சு பயன்படுத்தப்பட்டிருக்காங்க. குறிப்பா, செக்ரட்டரியா வர்றவருக்குக் குசும்பு ஜாஸ்தி.

விஜியோட வசனங்கள்ல துள்ளலும் துடிப்பும் அதிகம்னா, குகனோட ஒளிப்பதிவுல பரவசத்தோட பங்களிப்பு ஜாஸ்தி. வித்யாசாகரும் வைரமுத்துவும் இணைஞ்சு மிரட்டல... நம்ம மனசை

# பருத்தி வீரன்

'மண் மணம்'னு கேள்விப்பட்டிருக்கீங்களா? அந்த வாசனையோடு வந்திருக்குற படம். புதர் மண்டிக் கிடக்குற ஒரு வீரனோட மனசுல பூத்த ஒரு பூவைப் பத்தின கதை. எப்படிப்பட்ட முரடனையும் காதல் மென் மனசுக்காரனாக்கிடும். அப்படி ஒரு கதாபாத்

உருட்டியிருக்காங்க. ஒருத்தருக்கொருத்தர் 'உன் இசையா, என் தமிழா'ன்னு போட்டி போட்டு

# மொழி



நமக்கு நல்ல சங்கீதத் தமிழைத் தந்திருக்காங்க.

ராதாமோகனோட இயல்பான திரைக்கதை, படத்தை போரடிக்காம நகர்த்துது. பாசம், அன்பு, கோபம், சோகம்னு எல்லா அம்சங்களையும் இணைச்சுக் கலவையான சுவை விருந்து படைச்சிருக்கார்.

'மொழி' பேசும் படம் மட்டுமல்ல; அனைவரும் நேசிக்கும் படம்!



திரத்துல தன்னைப் பதிவு பண்ணியிருக்காரு சிவகுமாரோட இரண்டாவது மகன் கார்த்திக். முதல் படம்னே சொல்ல முடியாத அளவுக்கு நேர்த்தி. சென்னை ஜெயிலைப் பார்க்க ஏங்கி பேசறது நக்கல் ரகம்னா, ப்ரியா மணியைத் தவிக்க விடறது காதல் சுகம். க்ளைமாக்ஸ்ல அவரோட கொந்தளிப்பு நம்மைத் தவிக்க வெச்சுடுது.

கார்த்திக்கோட சித்தப்பாவா வர்ற சரவணனுக்கு இது செகண்ட் இன்னிங்ஸ். போலீஸ்காரனை மட்டுமல்ல, நம்மையும் பின்னி மேய்ஞ்சுடறார். ராஜ்கிரண் மாதிரி கோடம்பாக்கத்துக்கு நல்ல தீனி ரெடி. ப்ரியாமணியா இது! கலக்கிப்புட்ட ஆத்தா! மேக்கப்பில்லாத அவங்க முகத்துல நவரசங்கள் தாண்டவமாடுது. இவ்ளோ நாள் எங்க பதுக்கி வெச்சிருந்தாங்க இந்த நடிப்பை? கடைசிக் காட்சியில 'வேணாம்டா... வேணாம்டா'ன்னு அவர் கதறும்போது கண்ணீரே வந்துடுது. பொன்வண்ணனுக்கு மிடுக்கு ஜாஸ்தி. கஞ்சா கறுப்பு பாவம்ங்க. அடுத்த ஜென்மத்திலாவது அவர் தொழில் செய்யட்டும்!

யாரந்தக் குட்டிச்சாக்கு? புள்ள, செம துடிப்பு! ராம்ஜியோட ஒளிப்பதிவே நம்மைத் தாலாட்டும்போது, யுவனோட இசை நம்மை சொர்க்கத்துக்கே அழைச்சிட்டுப் போயிடுது. இளையராஜா குரல்ல 'அறியாத வயசு'ல ஆழம் அதிகம். சினேகன் வரிகள் சிலிர்ப்பைத் தருது.

தாமதமா தந்தாலும் படத்தைத் தரமா தந்திருக்காரு அமீர். ஒவ்வொரு காட்சியிலும் மெனக்கெடல் தெரியுது. மருது கேரக்டர் மூலமா சாதி பேதத்தை இடித்துரைக்கிறது இதம். யதார்த்தமான ஒரு சினிமாவைத் தந்ததுக்கு கை குலுக்குற அதே நேரத்துல, க்ளைமேக்ஸ்ல அவசியம்தான்னாலும் இவ்ளோ வக்ரம் தேவைதானான்னு கேக்கத் தோணுது. அதே மாதிரி அரவாணிகளைக் கேலிப் பொருளாக்கியிருக்க வேணாம்.



'ஸ்னோ வொய்ட்' என்று சொன்னதும், சின்னக் குழந்தைகள் முதல் பெரியவர்கள் வரை எல்லோருக்கும் ஒரு வெள்ளை வெளேர் அழகியும், கூடவே ஏழு குள்ளர்களும் தான் நினைவுக்கு வருவார்கள்.

ஆனால், உலகப் புகழ்பெற்ற இந்த தேவதைக் கதைக்கு, கம்ப்யூட்டர் துறையில் மட்டும் புதுவிதமான ஓர் அர்த்தம் உண்டு.

அறுபதுகளில் மெயின் ஃப்ரேம் (Mainframe) எனப்படும் கணினிகள் மிகப் பிரபலமாக இருந்த காலம். இந்த வகைக் கணினிகளைத் தயாரித்து விற்பனை செய்த நிறுவனங்களில், ஐ.பி.எம். (IBM) சிறந்து விளங்கியது.

ஐ.பி.எம். தவிர வேறு ஏழு சிறு நிறுவனங்களும் இந்த மெயின் ஃப்ரேம்களைத் தயாரித்துக் கொண்டிருந்தன. ஆனால், அவர்கள் ஏழு பேருடைய மொத்த விற்பனையையும் கூட்டிப் பார்த்தால் கூட, அவர்களால் ஐ.பி.எம்.மின் விற்பனையை எட்டிப் பிடிக்க முடியாது.

இதனால் ஐ.பி.எம்.மை ஸ்னோ வொய்ட்டாகவும், அதன் போட்டியாளர்களை ஏழு குள்ளர்களாகவும் சிலர் கிண்டலடித்துப் பேசத் தொடங்கினார்கள். கொஞ்சம் கொஞ்சமாக, கம்ப்யூட்டர் ஆர்வலர்கள் எல்லோர் மத்தியிலும் இந்தப் பெயர் பிரபலமடைந்துவிட்டது.

அந்தக் காலத்தில், கம்ப்யூட்டர் பயன்படுத்துகிறவர்கள் மத்தியில் ஐ.பி.எம். நிறுவனத்துக்கு இருந்த மரியாதை சாதாரணமானதல்ல. ஒரு கட்டத்தில், உலகக் கணினி விற்பனையில் முக்கால் வாசிக்கு மேல் ஐ.பி.எம்.மின் சட்டைப் பையில்தான் இருந்தது.

இதனால், அப்போதெல்லாம் கணினி சார்ந்த தொழில்களில் இறங்கியிருந்தவர்கள் எல்லோரும், ஐ.பி.எம்.முடன் இணைந்து பணியாற்ற விரும்பினார்கள். எப்படியாவது அவர்களுடைய கடைக்கண் பார்வை மட்டும் நம்மீது திரும்பிவிட்டால், ஒரே ராத்திரியில் நம்முடைய தலையெழுத்து மாறிவிடுமே என்று ஏங்கினார்கள்.

இந்த நிலைமையில், 1980-ஆம் ஆண்டு ஐ.பி.எம். நிறுவனத்திலிருந்து இரண்டு பேர் மைக்ரோசாஃப்ட் அலுவலகத்தைத் தேடி வந்தார்கள். ஏதோ மர்மக் கதையிலிருந்து நேராக இறங்கி வருகிறவர்களைப்போல, 'ரகசியமாக ஒரு விஷயம் பேச வேண்டும்' என்றார்கள்.

இதைக் கேட்டதும் மைக்ரோசாஃப்ட் ஆசாமிகளுக்கு ஒன்றும் புரியவில்லை. 'என்ன விஷயம்?' என்று குழப்பத்துடன் கேட்டார்கள்.

'முதலில் நீங்கள் இந்த ஒப்பந்தத்தில் கையெழுத்துப் போடுங்கள்' என்று ஒரு

# அடிச்சாச்சு லக்கி ப்ரைஸ்! 9

காகிதத்தை நீட்டியது ஐ.பி.எம். 'இங்கே பேசுகிற விஷயங்களை வெளியே சொல்ல மாட்டோம் என்று நீங்கள் ஒப்புக் கொண்டால்தான் நாம் மேற்கொண்டு பேச முடியும்.'

ஒருவழியாக ரகசியக் காப்பு ஒப்பந்தம் கையெழுத்தானதும், ஐ.பி.எம். பிரதிநிதிகள் வந்த விவரத்தைச் சொல்லத் தொடங்கினார்கள். அதைக் கேட்கக் கேட்க, மைக்ரோசாஃப்ட் ஆட்கள் எல்லோருடைய முகங்களிலும், ஸ்விட்ச் போட்டதைப் போல் பிரகாசம் பரவியது.

விஷயம் இதுதான்: ஐ.பி.எம். நிறுவனம், எல்லோரும் பயன்படுத்துவதற்கான பர்ஸனல் கம்ப்யூட்டர்களைத் தயாரிக்க முடிவெடுத்திருக்கிறது. அதற்குத் தேவையான மென்பொருள்களை மைக்ரோசாஃப்ட் எழுதித் தர வேண்டும்.

இத்தனை நாட்களாக மைக்ரோசாஃப்ட் செய்துகொண்டிருந்த அதே வேலைதான். ஆனால், இந்த முறை ஐ.பி.எம். என்கிற பெரு நிறுவனத்தின் முதுகுக்குப் பின்னால் சவாரி செய்கிற அபூர்வமான வாய்ப்பு அவர்களுக்குக் கிடைத்திருக்கிறது.

பொதுவாக, ஐ.பி.எம். நிறுவனம் முக்கியமான வேலைகளுக்கு வெளியாட்களைச் சார்ந்திருப்பதில்லை. 'எல்லாவற்றையும் நாங்களே தான் செய்து முடித்தோம்' என்கிற திருப்தி கலந்த பெருமை, அவர்களுடைய கௌரவப் பிரச்னையாக இருந்தது. ஆகவே, எதையும் மற்றவர்களிடம் நம்பி ஒப்படைக்கவே மாட்டார்கள்.

ஆனால், இந்த முறை PC எனப்படும் பர்ஸனல் கம்ப்யூட்டர்களைத் தயாரிப்பது என்று முடிவெடுத்த பிறகு, அதற்காக அவர்கள் ஒதுக்கியிருந்த நேரம், வெறும் ஒரு வருடம்தான். இந்தக் குறுகிய காலகட்டத்துக்குள் ஹார்ட்வேர், சாஃப்ட்வேர் என்று இரண்டையும் அவர்களே தயார் செய்து, பிழை திருத்தி, நல்லபடியாகச்



சந்தைக்குக் கொண்டு வருவது மிகவும் சிரமம்.

இந்தப் பிரச்னையை உணர்ந்த ஐ.பி.எம். பெருந்தலைகள், இதை எப்படித் தீர்ப்பது என்று தங்களுக்குள் தீவிரமாக யோசித்தன. சொன்ன தேதிக்குப் பர்ஸனல் கம்ப்யூட்டர்களைக் கடைகளுக்குக் கொண்டுவர வேண்டுமானால், நாம் கொஞ்சம் பிடிவாதத்தைக் குறைத்துக்கொள்வது நல்லது என்று தீர்மானித்



**ஐ.பி.எம். என்கிற பெருந்தலையின் முதுகில் சவாரி செய்யக் கிடைத்த வாய்ப்பு, மைக்ரோசாஃப்டுக்கு மிக அபூர்வமானது!**





தனர்.

அதாவது, மொத்த கம்ப்யூட்டரையும் நாமே வடிவமைத்துத் தயாரிக்க நேரம் இல்லை. ஆகவே, ஹார்ட்வேரை நம்மிடம் வைத்துக்கொண்டு, சாஃப்ட்வேரை மட்டும் வெளியில் யாரிடமாவது ஒப்படைத்துவிடலாம். பில் கேட்ஸுக்கு அடித்தது லக்கி ப்ரைஸ். ஐ.பி.எம்.

இப்படியொரு வாய்ப்புக்காகவே காத்திருந்த பில் கேட்ஸ், அதனை இரண்டு கைகளாலும் இறுகப் பற்றி, பாக்கெட்டுக்குள் போட்டுக் கொண்டார். 'தலைகீழாக நின்றாவது, நீங்கள் சொன்ன தேதிக்குள் எல்லா சாஃப்ட்வேர்களையும் எழுதிக் கொடுத்துவிடுகிறோம்' என்று ஐ.பி.எம். கையில் அடித்துச் சத்தியம் செய்து கொடுத்துவிட்டார்.

பில் கேட்ஸைப் பொருத்த அளவில் ஐ.பி.எம். என்கிற பெருந்தலையின் முதுகில் சவாரி செய்யும் இந்த வாய்ப்பு, மிக அபூர்வமானது. இதை மட்டும் சரியாகச் செய்து முடித்துவிட்டால், பணத்துக்குப் பணம், விளம்பரத்துக்கு விளம்பரம் என்று மைக்ரோசாஃப்டின் எதிர்காலம் மிகப் பிரகாசமாகிவிடும்.

அந்த விநாடியிலிருந்து, மைக்ரோ சாஃப்டில் பணிபுரிந்த எல்லோரும் ஐபிஎம். பர்ஸனல் கம்ப்யூட்டர்களுக்காக உழைக்கத் தொடங்கினார்கள். திடுதிப் பென்று மற்ற எல்லா வேலைகளும் இரண் டாம் பட்சமாகிவிட்டன. அத்தனை பேரும் ராத்திரி, பகல் பார்க்காமல் இந்த 'ரகசிய' வேலையில் இறங்கிவிட்டார் கள்.

'கடுமையாக உழைக்கிறவர்களை அதிர்ஷ்டம் தேடி வரும்' என்று ஒரு புகழ்பெற்ற வாசகம் உண்டு. அதுபோல, பில் கேட்ஸ் குழுவினர் பிசி-க்கான மென் பொருள்களை எழுதப் போராடிக் கொண்டி ருக்கையில், இன்னொரு புதிய, பெரிய வாய்ப்பு அவர்களைத் தேடி வந்தது.

(தொடரும்)




''உங்க பிள்ளையாண்டான் லேடீஸ் ஹாஸ்டலைச் சுற்றிச் சுற்றி வந்தானே, என்ன ஆச்சு?''

''ஒரு வழியா கேட் கீப்பர் கம் வாட்சுமேன் வேலை கிடைச்சுட்டுது!''

- பெ. கலாசாமி



"மாப்பிள்ளை கம்ப்யூட்டர் பேஸ்டு பிசினெஸ்னு சொன்னீங்க... அதை நம்பி பொண்ணு குடுத்து ஏமாந்துட்டேன்."

"ஏன்?"

"கம்ப்யூட்டர் சாம்பிராணி ஏஜென்சி எடுத்துக் கடை கடையாய் கொண்டு போய் போட்டுட்டு இருக்காராம்.

- சென்னிமலை
சி.பி. செந்தில்குமார்



''தலைவர் இன்னும் பழைய ஞாபகத்துலயே இருக்காரா... எப்படி?''

''பிறந்தநாள் கேக்கைக்கூட வீச்சரிவாளாலதான் வெட்றாரு!''

- தஞ்சை தாமு



# வீச்சரிவாள் கேக்கு..!



"வைர நெக்லஸ் வாங்கித் தந்தாதான் உங்க தங்கச்சி கல்யாணத்துக்கு வருவேன்னு என் கணவர்ட்ட கண்டிப்பா சொல்லிட்டேன்."

"வைராக்கியமான ஆளுதாண்டி நீ!"

- வசந்தி வள்ளுவன்



திருவாக்கு

வரதட்சணைப் பழக்கமும் கல்யாணங்களை டாம்பீகமாக நடத்துகிற வழக்கமும் தொலைய வேண்டும். பெயருக்கும் புகழுக்கும் ஆசைப்பட்டுத் தான தர்மங்கள் செய்வதைவிட, பணக்காரர்கள் தங்கள் ஏழை பந்துக்களின் விவாகத்துக்குத் தாராளமான திரவிய உதவி தர வேண்டும். உரிய காலத்தில் நம் பெண் குழந்தைகளுக்குக் கல்யாணமாகி ஸ்திரீ தர்மமும், சமூக தர்மமும் கெடாமலிருக்க வேண்டும். பெண்கள்தான் தர்மத்தை வளர்க்கிற தீபங்களாக இருக்கிறவர்கள். அவர்களின் பண்பு கெடுவதற்கு இடமே தரக்கூடாது. அப்புறம் தேசம் பிழைக்காது. 'குலஸ்திரீகளின் சித்தம் கெட்டுப் போய்விட்டதானால் அப்புறம் தருமமே போய்விடும்; தேசமே போய்விடும்' என்று தான் அர்ஜுனன்கூட பகவானிடம் அழுதான். நம் ஸ்திரீ தர்மத்தைக் காப்பாற்றுகிற பெரிய கடமையில் நாம் தவறிவிடக் கூடாது. பெண்கள் காலத்தில் கல்யாணமாகி கிருஹலக்ஷ்மிகளாக இருக்க வேண்டியது சமூக க்ஷேமத்துக்கு ரொம்பவும் அவசியம். இதற்கு ஒரு பெரிய முட்டுக்கட்டையாக இருக்கிற வரதட்சணை வழக்கத்தை நாம் கைவிட்டே யாக வேண்டும்.

# வழக்கத்தைக் கைவிடு!

- ஜகத்குரு
காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திர
சேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய ஸ்வாமிகள்



**பெ**ண் தெய்வங்கள் இருக்கும் திக்கு நோக்கி, பய பக்தியுடன் தண்டம் சமர்ப்பிக்கும் அடியார்களில் அடியேனும் ஒருவனாகிச் சிறிது காலமாயிற்று.

என்னைப் பொருத்த அளவில், உலகில் சாதாரண ஸ்திரீகள் யாருமே கிடையாது. எல்லாரும் மாதரசிகள், பெண்மணிகள், ஸ்திரீ ரத்தினங்கள், பெண் தெய்வங்கள், இன்ப விளக்குகள், இளங்குயில்கள், பொன் மயில்கள்தான். உலகம் இத்தகைய ஆனந்தக் காட்சியாக அடியேனுக்குத் தோற்றம் அளிப்பதற்கு முக்கியக் காரண புருஷர்கள் கவி சுப்பிரமணிய பாரதியும், திரு.வி.கலியாண சுந்தர முதலியாருமேயாவர். படிக்கப் படிக்க, மிகவும் சாதாரண ஸ்திரீகளெல்லாம் என் கண்முன்னே தெய்வ மகளிராகக் காட்சி தரலாயினர்.

ஆரம்பத்தில், மேற்கூறிய பெரியார்களுடனே நான் முற்றும் மாறுபட்ட குற்றத்தை ஒப்புக்கொள்கிறேன்.

**"நல்ல**
**காதல் புரியும் அரம்பையர் போலிளம்**
**கன்னியர் சூழ்ந்த தமிழ்நாடு"**

எனும் பாரதியார் பாட்டின் அடிகளை முதன்முதலில் நான் கேட்டபோது, இதைப் போன்ற வெள்ளைப் புளுகு அல்லது பச்சைப் பொய் - உலகில் வேறொன்றும் கிடையாது - என்று எண்ணினேன். தற்கால தமிழ்நாட்டின் இளங் கன்னியர் அரம்பைகளல்லர் என்பது சர்வ நிச்சயம். அவர்கள் காதல் புரிவதில்லையென்று கோயிலில் விளக்கு வைத்து அணைப்பேன். தமிழ்நாடு மற்ற எத்தனையோ துறைகளில் மேன்மை பெற்றிருக்கலாம். ஆனால், பெண்களின் அழகுக்கு நமது நாடு பெயர் போனதல்ல. இச் சிறப்பை கேரளம், சிந்து, காஷ்மீரம் போன்ற நாடுகளுக்குக் கொடுத்து விடத்தான் வேண்டும். மேலும், இந் நாளில் நமது பெண்களுக்குக் கன்னிப் பருவத்தில் காதல் புரியும் சந்தர்ப்பம்தான் ஏது? 'பாரதியார் ஏன் இவ்வளவு பச்சைப் பொய் சொல்கின்றார்?' என்று இவ்வாறு சிந்திக்கலானேன்.

**ஸ்**திரீகளைப் ''பெண்மணிகள்'' என்றும், "பெண் தெய்வங்கள்" என்றும் "மாதரசிகள்" என்றும் திரு.வி.க. முதலியோர் புதுத் தமிழில் சொல்கின்றார்கள் என்னும் சந்தேகமும் முதலில் எனக்கிருந்தது. ஆண்களைப் பற்றிச் சொல்லுங்கால், "ஆடவ தெய்வங்கள்" என்றாவது, "ஆண்மணிகள்" என்றாவது, "ஆணரசர்கள்" என்றாவது சாதாரணமாகச் சொல்கிறோமா? கிடையாது. பழைய நூல்களிலே ''புருஷ வியாக்ரம்'', ''ஆண் சிங்கம்'', "இளங்காளை" போன்ற சொற்



றொடர்கள் வருவது உண்மை. ஆனால் ஆண்மகனுக்கு இவையெல்லாம் சிறப்பா, இழிவா ' என்பதே ஐயத்துக்கிடமானது. அறிவுக்கே சிறப்பு மிகுந்த இந் நாளில் யாரையாவது பார்த்து "அடே ஆண் புலியே! ஏ இளம் மாடே!" என்று அழைப்போமாயின் அவன் உண்மையிலேயே புலியின் குணமும், மாட்டின் குணமும்



# ஏன் படைத்தாய்?

பெற்று அறையவோ, முட்டவோ வந்தால் ஆச்சரியப்படுவதற்கில்லை. நல்ல வேளையாக, இவ் வழியில் ஆண்களைச் சிறப்பிப்போர் இந் நாளில் யாரும் கிடையாது.

பாரத நாட்டில் நான் அறிந்த வரையில் புருஷர்களுக்குள்ளே ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸர் ஒருவர்தான் "தேவர்" என்னும் சிறப்புப் பெயர் பெற்றுள்ளார். ஆனால் ஸ்திரீகளிலென்றால், எல்லாரும் கமலாதேவி, விமலாதேவி, லக்ஷ்மிதேவி, பார்வதி தேவி, ருக்மணி தேவி, சகுந்தலா தேவிதான். ஏன்?

**பெ**ண் தெய்வங்காள்! மன்னியுங்கள். இந்தச் சந்தேகங்களெல்லாம் பின்னால் எனக்குப் பூரணமாய் நிவர்த்தியாகி விட்டனவென்று தெரிவித்துக் கொள்கிறேன். எப்படியிருந்தாலும் தமிழ்நாடு நமது நாடு. தமிழ்நாட்டுப் பெண்கள் நமது சகோதரிகள். எனவே, பாரதியார் பாடியதில் தவறு என்ன? காக்கைக்குத் தன் குஞ்சு பொன் குஞ்சல்லவா? "மணி" என்றால் பொன் மணியாய்த்தான் இருக்க வேண்டுமா? கருமணி அல்லது நீலமணியாகவும் இருக்கலாமன்றோ? பார்க்கப் போனால், ரூப சௌந்தரியத்தில் என்ன இருக்கிறது? குண சௌந்தரியமன்றோ உண்மை சௌந்தரியமாகும்! கல்வியழகே யழகு! கற்பின் புகழே புகழ்! நமது இளங்கன்னியர் புரியும் காதலைப் பாடியபோது, பாரதியார் கேவலம் கீழ்த்தர நாவல்களில் காணப்பெறும் இழிவான காதலையா குறிப்பிட்டார்? இல்லை; இல்லை. தமிழ்ப் பெண்களின் காதல், இல்வாழ்க்கையோடியைந்த உயர் காதலாகும் – என் உள்ளத்திலே பெரியதொரு புரட்சி உண்டாயிற்று. எவ்வளவு பெரிய புரட்சியெனில் வங்கத்தின் பிரபல நாடகாசிரியரான துவிஜேந்திரலால் ராய் என்பவர் ஓரிடத்திலே,

"பகவானே! பெண் தெய்வங்களைப் படைத்து இவ்வுலகை இன்பமயமாக்கிய நீ, அவ்வின்பத்தைக் கெடுப்பதற்கு இந்த ஆண் மிருகங்களை ஏன் படைத்தாய்?"

– என்று எழுதியிருந்ததைப் படித்த போது, "உண்மை! உண்மை!" என்று கதறினேன்.

ஏ! ஆண் மிருகங்காள்! பெண் தெய்வங்களைப் போற்றுங்கள்.

– 'பெண் தெய்வங்கள்'
வானதி வெளியீடு



'ராயபுரம் பில்லு' பயங்கரக் குஷியில் இருக்கிறார். இருக்காதா, பின்னே? அவர் வாழ்ந்திருக்கும் 'தீபாவளி' படம் கோடம்பாக்கத்தின் கதவுகளை வெற்றிகரமாகத் தட்டியிருக்கிறதே!

**எப்படியிருக்கு பில்லு, லோக்கல் ஏரியா தாதா அனுபவம்?**

"ஜெயம் ரவின்னே யாரும் என்னைக் கூப்பிடறதில்ல. பில்லு, பில்லுன்னுதான் உயிரை விடறாங்க. பிரமாதமான வேஷம் தந்த எழில் சாருக்குத்தான் நன்றி சொல்லணும். ராயபுரம் பையனாவே நான் மாறிட்டேன். இப்பக்கூட சமயத்துல அந்த மாதிரி பாஷை பேசிடுறேன்."

**எப்படி நடிக்கணும்னு விரும்புறீங்க?**

"நல்ல கதையைத் தேர்ந்தெடுத்து அதுக்குத் தகுந்தா மாதிரி நடிக்கணும். மத்தவங்க போல நாமளும் நடிக்கணும்னு போட்டி போட்டா, கொஞ்ச நாளுக்கு அப்புறமா காணாமப் போயிடுவோம்."

**தெலுங்கு ரீமேக்தான் அதிகம் பண்றீங்க போல...?**

"தனிப்பட்ட காரணம் எதுவுமில்ல. தெலுங்குப் படத்துல அதிகமா கமர்ஷியல் இருக்கு; என்னோட வயசுக்குப் பொருத்தமா இருக்கு. அவ்ளோதான் விஷயம்!"

**பாவனா கூட உங்களுக்கு நல்லா சூட்டாகுதே...**

"கதாநாயகியைக் கைகாட்டுறது என் வேலை இல்ல. கதைக்கு ஏத்த மாதிரி தேர்ந்தெடுக்கறது தயாரிப்பாளர்தான்... இருந்தாலும் என்கூட நடிச்சவங்க எல்லாருமே எனக்குப் பொருத்தமானவங்கதான்."

**குறும்படம் இயக்கியிருக்குற நீங்க திரைப்படம் இயக்குவீங்களா?**

"காலேஜ்ல படிக்கும்போது பண்ணினேன். அப்பா சினிமாவுல இருக்கறதுனால எனக்குச் சின்ன வயசுலேர்ந்தே சினிமா ஆசை அதிகம். டைரக்‌ஷன்ல ஆர்வம் இருக்கு. எதிர்காலத்துல கண்டிப்பா செய்வேன்."



"க...
தெ...

**உங்க அண்ணன் உங்கள மட்டுமே வச்சுப் படம் பண்றார். ஏன் மத்த ஹீரோக்களுக்கு வாய்ப்புத் தர்றதில்ல?**

"அண்ணனுக்குப் பெரிய ஹீரோக்களை வச்சுப் படம் பண்றதுக்கு நிறைய வாய்ப்புகள் வருது. ஆனா, தம்பியை வச்சு நல்ல படம் கொடுக்கணும்னு நினைக்கிறாரு. இது எனக்குக் கிடைச்ச மிகப்பெரிய பாக்கியம்!"

**நீங்க இயக்குநர்களின் நடிகனா... இல்ல...?**

"கண்டிப்பா. அதுல சந்தேகமே வேண்டாம். நல்ல இயக்குநர்கள்தான் ஒரு நடிகனை உருவாக்குறாங்க. கதைக்குப் பொருந்திப்போன முகத்தைத் தான் மக்கள் கொண்டாடுறாங்க."

**உங்க செட் நடிகர்களுக்கு வரிசையா திருமணம் நடக்குதே... உங்களுக்கு எப்போ...?**

"நான் என்னைக்குமே குடும்பத்துக்குக் கட்டுப்பட்டு நடக்கறவன். வீட்டுல கல்யாணப் பேச்சு ஆரம்பிச்சாச்சு... நான்தான் கொஞ்ச நாளைக்கு அது பத்திப் பேச வேண்டாம்னு சொல்லியிருக்கேன்"

**காதல்தான் காரணமா?**

"காதலெல்லாம் சினிமாவோட சரி. நான் ரொம்ப நல்ல பையன்ங்க!"

**இளம் ஹீரோக்கள் மத்தியில இன்னைக்கு ஆரோக்யமான சூழ்நிலை நிலவுதா?**

"என்ன இப்படி கேட்டுட்டீங்க? ஃபங்ஷனுக்கெல்லாம் போறதில்லையா? கும்பல் கும்பலா கூடி கும்மியடிக்கிறோம். பயங்கர ஃபிட்டு நாங்க, தெரியும்ல!"

**அடுத்த பிராஜெக்ட் என்ன?**

"ஜீவா இயக்கத்துல 'தாம் தூம்', அடுத்து கசி கணேசன் இயக்குத்துல ஒரு படம் பண்றேன். எனக்கு அடுத்த பரிமாணமா இந்த ரெண்டு படங்களும் அமையும்!"

*சந்திப்பு:*

**ஆர். முத்துராமலிங்கம்**

# ல்யாணப் பேச்சு
# ாடங்கியாச்சு!"



சிறுகதை

சந்தன் லால் சூப்பர் மார்க்கெட். சூப்பர் மார்க்கெட்டின் சேமிப்புக் கிடங்கு அறையில் வரவு-செலவுக் கணக்குகளைப் பெரிய பெரிய லெட்ஜர்களில் எழுதிக்கொண்டிருந்த வள்ளியப்பன், 'டர...டர...'வெனக் கண்ணாடிக் கதவு திறந்த ஓசையைக் கேட்டுத் தலையை உயர்த்தினார்.

கடைப் பையன் ஒருவன் "ஐயா! முதலாளி உங்களை வரச் சொன்னாங்க.." என்று சொன்னான். வள்ளியப்பன் அவசரமாக லெட்ஜரை மூடிவைத்துவிட்டு, முன் பக்கம் இருந்த சந்தன்லாலின் அறையை நோக்கி நடந்தார்.

சந்தன்லால் சேட்டின் அறைக்குள் நுழைந்ததும் ஜவ்வாது வாசனை கும்மென்று அடித்தது. சந்தன்லால் எழுபது கிலோ எடையில் தொப்பையோடு இருந்தார். பத்து விரல்களிலும் வண்ண வண்ண மோதிரங்கள் டாலடித்தன.

"வாங்கோ வள்ளியப்பன்! அடுத்த வாரத்தில் இருந்து நான் வீட்டுல ஓய்வெடுக்கப் போறேன். சூப்பர் மார்க்கெட்டை என் பையன் அரிதாஸ்தான் நிர்வாகம் பண்ணப் போறான். நான் உங்களை வேலைக்குச் சேர்க்கும்போது உங்ககிட்ட ஒரு கண்டிஷன் போட்டேன். உங்களுக்கு ஞாபகம் இருக்கா..? நான் இந்தக் கடையை நிர்வாகம் செய்யறவரைக்கும்தான் உங்கள வேலைக்கு வச்சுக்கிடுவேன். எனக்குப் பிறகு என் பையன் கடையோட நிர்வாகப் பொறுப்பை ஏத்துக்கும்போது, உங்கள வேலைக்கு வச்சுக்கிறதும், வச்சுக்காததும் அவனோட விருப்பத்தைப் பொருத்ததுன்னு. என் மகனோட விருப்பத்துக்கு நேர்மாறா உங்களுக்கு நான் உதவ முடியாது. இங்க நீங்க தொடர்ந்து வேலை பார்க்கறதும் பார்க்காததும் என் பையனோட கையிலதான் இருக்கு. இதைச் சொல்லத்தான் உங்களைக் கூப்பிட்டேன். இப்பப் போயி வேலையைப் பாருங்க..." என்று வருத்தத்துடன் அனுப்பி வைத்தார் வள்ளியப்பனை.

ஏதோ கணக்கில் சந்தேகம் கேட்கத்தான் தன்னைக் கூப்பிடுகிறார் என்று நினைத்துக் கொண்டு வந்தவர், முதலாளி இவ்வளவு பெரிய குண்டைத் தூக்கிப்

# உன்னை விடமாட்டேன்!

போடுவார் என்று கொஞ்சமும் எதிர் பார்க்கவில்லை. தளர் நடைபோட்டு தன்னுடைய நாற்காலிக்கு வந்து, மனச் சோர்வோடு அமர்ந்தார். சந்தன்லாலைப் பார்ப்பதற்கு முன்னால் இருந்த உற்சாகம் இப்போது முழுமையாக வழிந்தோடி விட்டிருந்தது.

ஏழு வருடங்களுக்கு முன்பு அவர் செய்த ஒரு செயலுக்குண்டான தண்டனையை இப்போது அனுபவிக்கப் போகிறார்.

**மா**ணவ - மாணவிகள் சேர்ந்து படித்த அந்த உயர்நிலைப் பள்ளியில் பத்தாம் வகுப்புக்குக் கணக்குப் பாடம் எடுக்கும் வாத்தியாராக இருந்தார் வள்ளியப்பன். பத்தாம் வகுப்பு 'பி' பிரிவுக்கும் அவர்தான் கிளாஸ் வாத்தியார். சந்தன்லால் சேட்டின் பையனான அரிதாஸ், அவர் வகுப்பு மாணவன்தான்.

பணத்துக்குப் பஞ்சமில்லை. அளவுக்கு அதிகமாகக் கையில் காசு புழங்கியதால் அரிதாஸ் பிஞ்சிலேயே பழுத்துவிட்டான். அவன் கெட்டுப் போனதோடு மட்டுமல்லாமல், கூடப் படிக்கும் மாணவர்களையும் கூட்டுச் சேர்த்துக்கொண்டு கிளாஸை 'கட்' அடித்துவிட்டு சினிமாவுக்குப் போக ஆரம்பித்தான். அது போக பள்ளி மாணவிகளிடமும் குறும்பு செய்ய ஆரம்பித்தான்.

வள்ளியப்பன் வாத்தியாரின் கடைசிப் பெண், அதே பள்ளியில் ஒன்பதாம் வகுப்புப் படித்துக்கொண்டிந்தாள். அரிதாஸ், வள்ளியப்பன் வாத்தியாரின் மகளிடமும் தன்னுடைய வேலையைக் காண்பித்துவிட்டான்.

அழகம்மை, அவமானம் தாங்காமல் அழுதுகொண்டே தன் தந்தையிடம் அரிதாஸ் தன்னிடம் தகாத முறையில் நடக்க முயன்றதாக முறையிட்டாள்.

கொதித்துப்போன வள்ளியப்பன், தலைமை ஆசிரியரிடம் அரிதாஸைப் பற்றிப் புகார் செய்தார். தலைமையாசிரியரும் அரிதாஸைத் தன்னுடைய அறைக்கு வரச் செய்து கடுமையாகக் கண்டித்ததோடு, அவன் தந்தையான சந்தன்லாலையும் பள்ளிக்கு வரவழைத்து, அவர் முன்னிலையிலும் அரிதாஸை முதலும் முடிவுமாக எச்சரிக்கை செய்து அனுப்பினார்.

இவ்வளவும் பதினைந்து நாட்களுக்குத்தான். சுருட்டி வைத்திருந்த வாலை மறுபடியும் வெளியே நீட்டினான் அரிதாஸ். அதோடு தலைமையாசிரியரிடமும், தன் தந்தையிடமும் தன்னைப் போட்டுக் கொடுத்த வள்ளியப்பனைத் தன் பரம எதிரியாகப் பாவிக்கத் தொடங்கினான்.

அதற்குப் பழி வாங்கும் செயலாக ஒரு நாள் பள்ளி விட்டுத் தனியாக வீடு வந்துகொண்டிருந்த அழகம்மையின் கையைப் பிடித்து இழுத்து வம்பு செய்தான்.

இந்த முறை வள்ளியப்பன் அரிதாஸைப் பற்றிப் புகார் செய்த போது, தயவு தாட்சண்யம் பார்க்காமல் நன்னடத்தையில் சிவப்பு இங்கில் குறியிட்டு, டி.சி.யை அரிதாஸ் கையில் கொடுத்து அனுப்பிவிட்டார் தலைமையாசிரியர்.

வள்ளியப்பன் பள்ளிவிட்டு வீடு வரும் வழியில் எதிரே வழிமறித்தான் அரிதாஸ்.

"யோவ்... கணக்கு வாத்தி! என்ன டி.சி. கொடுத்து வெளியில அனுப்பிச்சிட்டேல்ல... அதுக்குண்டான பலனை இனிமேதான் அனுபவிக்கப் போற. நான் யாருன்னு உனக்குக் கூடிய சீக்கிரமே காட்டுறேன்!" என்று கண்கள் சிவக்க மிரட்டிவிட்டுப் போனான்.

அவன் மிரட்டிவிட்டுச் சென்றதும், வள்ளியப்பனின் அடி வயிற்றில் கிலி உருவாகிவிட்டது.

'என்ன செய்வான்? கல்லைவிட்டு எறிந்து மண்டையை உடைப்பானா? காலிப் பசங்களைக் கூட்டிவந்து நம்ம பொண்ணோட கையைப் பிடித்து இழுத்து கலாட்டா செய்வானோ?'

வள்ளியப்பனுக்கு மனதில் பயம். அதனாலேயே தன்னுடைய மகளைக் கையோடு பள்ளிக்கு அழைத்துச் சென்று, கையோடு வீட்டுக்கு அழைத்து வந்தார்.

இப்படியே ஒரு வாரம் சென்றிருக்கும். அவர் பயந்தபடி எதுவும் நடக்கவில்லை. ஏன்... அரிதாஸ் கூட கண்ணில் படவில்லை. அப்புறம்தான் தெரிந்தது- சந்தன்லால் சேட், அரிதாஸை பெங்களூரில் உள்ள அவனுடைய அத்தை வீட்டுக்கு அனுப்பி வைத்துவிட்டார் என்று. அரிதாஸ் ஊரில் இல்லை என்றவுடன்தான் வள்ளியப்பனுக்கு போன உயிர் திரும்பி வந்தது.

அடுத்த வருடமே பள்ளியிலிருந்து ஓய்வு பெற்றுவிட்ட வள்ளியப்பன், தன்னுடைய மூன்று பெண்களில் இரண்டு பெண்களுக்குக் கர்ணம் போட்டுக் கல்யாணத்தை முடித்துவிட்டார். கடைசிப் பெண் அழகம்மையின் கல்யாணம்தான் கேள்விக்குறியாகப் போய்விட்டது. வரும் பென்ஷனில் குடும்பம் நடத்தத்தான் முடிந்தது.

அந்த நேரத்தில் 'சூப்பர் மார்க்கெட்டில் கணக்கு எழுத அனுபவமுள்ள கணக்கர் தேவை' என்ற பத்திரிகை விளம்பரம் கண்டு, விளம்பரம் கொடுத்த சூப்பர் மார்க்கெட்டை வள்ளியப்பன் அணுகிய போதுதான் தெரிந்தது- அது அரிதாஸின் தந்தையான சந்தன்லால் சேட்டுக்குச் சொந்தமான ஸ்தாபனம் என்பது.

சந்தன்லால் நாணயமான மனிதர். தவறு செய்தது தன்னுடைய மகன்தான் என்றும், வள்ளியப்பன் மீது எந்தத் தவறும் இல்லையென்று உணர்ந்து, ஒரே ஒரு நிபந்தனை விதித்து வள்ளியப்பனுக்கு கடைக் கணக்கு எழுதும் வேலையைக் கொடுத்து, மாதம் மூவாயிரம் ரூபாய் சம்பளமும் போட்டுக் கொடுத்தார்.

வள்ளியப்பனுக்கு இதைவிட சந்தோஷம் வேறு என்ன இருக்க முடியும்? பென்ஷனில் குடும்பச் செலவுகளை கவனித்துக் கொண்டு சந்தன்லால் கொடுத்த மூவாயிரத்தையும் அழகம்மையின் பேரில் வங்கியில் சேமித்து வைத்தார். அழகம்மையும் மூன்று வருடக் கல்லூரிப் படிப்பை முடித்துவிட்டு, பள்ளிக் குழந்தைகளுக்கு டியூஷன் எடுத்துத் தந்தைக்கு உதவியாக இருந்தாள்.

இன்னும் ஒரு வாரத்துக்குள் எல்லாம் முடியப் போகிறது என்பதை நினைக்க நினைக்க வள்ளியப்பனுக்கு கணக்கு வழக்குகளைப் பார்ப்பதில் கவனம் செல்லவில்லை. அப்படியே லெட்ஜர்களை மூடி வைத்துவிட்டு, சந்தன்லாலிடம் சொல்லிக்கொண்டு வீட்டுக்குக் கிளம்பினார்.

'இங்கு நினைத்த நேரத்துக்கு வரலாம், போகலாம். நல்ல சம்பளம். இன்னும் ஒரு

## அய்யா வழி!

நடிகர் முரளியை வைத்து 'காமராசு' படத்தை இயக்கிய பி.சி. அன்பழகன், நீண்ட இடைவெளிக்குப் பிறகு பக்காவான ஸ்கிரிப்டுடன் மீண்டும் களமிறங்கிவிட்டார்.

"பெண்ணின் மார்பகத்துக்கும் ஆணின் மீசைக்கும் வரி கேட்ட தறுதலை மன்னனைத் தட்டிக் கேட்டு, மனிதர்களையும் கடவுளாகக் கண்ட கடவுளின் கதை இது. படத்தின் பெயர் 'அய்யா வழி'. ஒரு சமஸ்தானத்தின் அதர்ம அடிகளால் தண்டு வடம் வளைந்து தாழ்ந்த மனிதர்களை, முண்டாசு கட்டி பெண்டு நிமிர்த்தி மன்னர்களாக்கி, அம்பேத்கர், பெரியாருக்கு முன்பே சமத்துவம் கண்டவர் வைகுண்ட சாமி. அவரின் புனித நிழலாக இப்படத்தில் நடிக்கிறார் கே.பாக்யராஜ். இப்படம் மூலம் என் நண்பர்களின் உதவியோடு நான் தயாரிப்பாளனாகவும் புதிய முகம் காட்டுகிறேன்!" என்கிறார் அன்பழகன்.



வருடம் வேலை செய்துவிட்டால் அழகம்மையின் கல்யாணத்தை ஜாம் ஜாம் என்று முடித்து விடலாம். இனி வேறு இடம் தேடிக் கடை கடையாக ஏறி இறங்க வேண்டும். நம் கையில் என்ன இருக்கிறது? எல்லாம் கடவுள் விட்ட வழி!'

**த**ங்களுடைய புதிய முதலாளியை எதிர்பார்த்து சூப்பர் மார்க்கெட்டில் வேலை செய்யும் மொத்த ஊழியர்களும் ஆவலோடு இருக்க, வள்ளியப்பன் மட்டும் மனம் கலங்கிப் போய் இருந்தார்.

அரிதாஸை, சந்தன்லால் சேட் கடை ஊழியர்களுக்கு அறிமுகம் செய்து வைத்துவிட்டு, சூப்பர் மார்க்கெட்டின் நிர்வாக உரிமையையும் அவனிடமே ஒப்படைத்துவிட்டு ஒதுங்கிக் கொண்டார். முதல் நாள் முடிந்தது.

**ம**றுநாள் சூப்பர் மார்க்கெட்டுக்கு வந்த அரிதாஸ் கடைப் பையனை அனுப்பி வள்ளியப்பனை அழைத்து வரச் சொன்னான்.

வள்ளியப்பனுக்கு வழக்கத்துக்கு மாறாக வியர்வை ஆறாகப் பெருகியது. பி.ப்பி. எகிறியது. உடம்பை எவ்வளவு தளர்வாக வைத்துக் கொள்ள முடியுமோ, அவ்வளவு தளர்த்திக்கொண்டு, அரிதாஸின் அறைக் கதவைத் திறந்து, பார்வையைக் கீழ்நோக்கிச் செலுத்தியபடி அவன் முன்னே நின்றார்.

தன்னுடைய இருக்கையை விட்டு எழுந்த அரிதாஸ், வள்ளியப்பன் சற்றும் எதிர்பாராதவிதமாக, குனிந்து அவருடைய பாதத்தைத் தொட்டுக் கண்களில் ஒற்றிக் கொண்டான்.

பதறிவிட்டார் வள்ளியப்பன்.

"தம்பி..."

"ஐயா, என்னை மன்னிச்சிடுங்க. ஏதோ இளம் வயசுல தெரியாத்தனமா அன்னைக்குத் தப்பு பண்ணிட்டேன். அதையெல்லாம் உணர்ந்ததாலதான் இன்னைக்கு இவ்ளோ தூரம் வளர்ந்திருக்கேன். உங்க ஆசீர்வாதம் எனக்கு என்னைக்கும் வேணும்!"



# வீராசாமி

**மொ**தல்ல விஜய டி.ராஜேந்தரோட தைரியத்தைப் பாராட்டியே ஆகணும். கதை, திரைக்கதைல ஆரம்பிச்சு, கதாநாயகன் வரைக்கும்னு நான் ஸ்டாப்பா பின்னுறார். கருத்துச் சொல்றதுக்காகவே எடுக்கப்பட்டிருக்கும் படம்.

தொடாமலே மும்தாஜோட மனசைத் தொடறதும், தங்கச்சிக்காக உருகித் தவிக்கறதும், பிரச்னைன்னா கதறி வசனம் பேசியே வில்லன்களை விரட்டி அடிக்கிறதும்னு தான் வரைக்கும் திருப்தி பட்டா போதும்னு நெனைச்சிருக்காரு டி.ஆர். ஆனா பாவம், ரசிகனையும் அவர் கொஞ்சம் மனசுல நினைச்சிருக்கலாம்!

மும்தாஜ்... ஐயோ! இழுத்து இழுத்து பேசறது சகிக்கல... அதைவிடக் கொடுமை அவர் போடுற குத்தாட்டம். மேக்னாவைப் பத்திப் பேச வேணாம் விட்ருவோம். யார் அந்தத் தங்கச்சி? ஒகே. ரகம். 'ஹேண்டிகேம் சந்தானம்'னு பட்டம் தரலாம்... வேற ஒண்ணும் சொல்றதுக்கில்ல. இசை பரவால்லைங்க. 'வெண்ணிலவு' பாட்டு மனசுல பதியுது. மத்த விஷயங்களைப் பத்தி டி.ஆரே கவலைப்படல.... நாம ஏன் கவலைப் படணும்?!

இருபத்தி மூணாம் புலிகேசிக்கப்புறம் ஒரு முழு நீள நகைச்சுவை படம் பார்த்த திருப்தி!

- லஜ்ஜாவதி

ராசிபலன்

**மேஷம்** : எண்ணங்கள் யாவும் ஈடேறும் வாரம். தனம், கல்வி வளம் மேலோங்கும். பூர்வீகச் சொத்து பாகப்பிரிவினை ஆகும். புதுச் சொத்து சேரும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். திருமண காரியம் கைகூடும். ராகு / கேது / குரு / சனி வழிபாடு நற்பலனைத் தரும்.

**ரிஷபம்** : சுபகாரியம் கைகூடும். நிதி நிலைமை முன்னேற்றம் காணும். படிப்பில் நல்ல மதிப்பெண்கள் கிட்டும். மகப்பேறு பாக்கியம் உண்டு. உத்தியோகத்தில் ஊதிய உயர்வு, இடமாற்றம் ஏற்படும். மனத்தில் தைரியம், தன்னம்பிக்கையும் மிகுந்து காணும். ராகு / கேது வழிபாடு செய்து வர நற்பலன் கிட்டும்.

**மிதுனம்** : மனத்தில் புத்துணர்ச்சி ஏற்படும். சுபநிகழ்ச்சி கைகூடும். உல்லாசப் பிரயாணம் செய்ய வேண்டி இருக்கும். வெளிநாடு செல்லும் வாய்ப்பு வந்து சேரும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் கிட்டும். குரு வழிபாடு செய்து வர, நலம் கிட்டும்.

**கடகம்** : எதிலும் கவனத்துடன் செயல்படவும். கொடுக்கல், வாங்கலில் எச்சரிக்கை தேவை. திருமணம் கைகூடும். வாக்குவாதத்தைத் தவிர்க்கவும். நண்பர்கள் மூலம் ஆதாயம் கிட்டும். குழந்தைகளால் சுபநிகழ்ச்சி ஏற்படும். வீடு / மனை வாங்க நல்ல தருணம். சனி / ராகு / கேது வழிபாடு நற்பலனைத் தரும்.

**சிம்மம்.**: சாதனை படைக்கும் வாரம். பணக் கஷ்டம் விலகும். நல்ல நிகழ்ச்சிகள் நடக்கத் துவங்கும். வீடு மாற்றம் / தொழில் மாற்றம் ஏற்படும். கல்வி வளம் மேலோங்கும். எதிர்பாராத வருமானம் கிடைக்கும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் காணும். ராகு / கேது / சனி / குரு வழிபாடு செய்து வருதல் நற்பலனைத் தரும்.

**கன்னி** : மிகவும் மகிழ்ச்சி

# 4.3.2007 முதல் 10.3.2007 வரை

## பரத்வாஜ் பதில்கள்

**என் மகளுக்கு எப்போது திருமணம் நடக்கும்?**

- எஸ்.ராமானுஜம், சென்னை

உங்கள் மகளுக்கு 27ஆவது வயதில் திருமணம் நடக்கும். தொழில்நுட்பத் துறையில் படித்த, சாந்த குணமுள்ள வரன் அமையும்.-உறவில் அமையாது.

**என் மகனுக்குத் திருமண காரியம் நடத்துவதில் தாமதமாகிறது. ஏதாவது தோஷம் உள்ளதா?**

- ராமநாதன், சென்னை - 28

உங்கள் பையனுக்கு சர்ப்பதோஷம் உள்ளதால், சர்ப்ப தோஷம் உள்ள பெண்ணைப் பார்க்கவும். 2007ல் திருமணம் நடக்கும். பரிகாரம் தேவையில்லை.

கரமான வாரம். திருமண காரியம் கைகூடும். சொத்துக்கள் வாங்க ஏற்ற தருணம். செலவுகள் சுபமானதாக இருக்கும். மனச்சலனம் தீரும். உத்தியோகத்தில் உயர்வு உண்டு. மனைவி வழியில் ஆதாயம் ஏற்படும். கல்வி வளம் மேலோங்கும். குரு வழிபாடு செய்து வருதல் நலம்.

செய்து வருதல் நற்பலனை அளிக்கும்.

**விருச்சிகம்** : எண்ணங்கள் யாவும் ஈடேறும். சுபநிகழ்ச்சி நடக்கும். சொத்து / மனை வாங்க நல்ல தருணம். பணக் கஷ்டம் விலகும். திருமண காரியம் கைகூடும். கொடுக்கல், வாங்கல் சிக்கல் தீரும். கல்வி வளம் மேலோங்கும். வழக்கு வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் காணும். ராகு / கேது / குரு / வழிபாடு செய்து வருதல் நலம் தரும்.

**தனுசு** : தெய்வ பலம் நிறைந்த வாரம். கல்வியில் வளர்ச்சி காணும். உடல்நிலை சீராகும். கொடுக்கல், வாங்கல் சிக்கல் தீரும். வேலைப்பளு அதிகரிக்கும். வியாபாரத்தில் நல்ல அபிவிருத்தி ஏற்படும். திருமணம் கைகூடும். செலவுகள் இருக்கும். சத்ரு தொல்லை விலகும். சனி / குரு வழிபாடு செய்து வர நற்பலனைத் தரும்.

**மகரம்** : திருமண காரியம் கைகூடும் வாரம். வராத நிலுவைகள் வரும். உத்தியோகத்தில் உயர்வு, இடமாற்றம் ஏற்படும். வீடு / மனை வாங்க நல்ல தருணம். நண்பர், உறவினர் ஆதாயம் ஏற்படும். எதிலும் நிதானித்து முடிவு எடுப்பது நற்பலனை அளிக்கும். ராகு / கேது/ சனி வழிபாடு செய்து வருதல் நற்பலனைத் தரும்.

# நடக்குமென்பார்; நடக்கும்!

**துலாம்** : அற்புதமான வாரம். பூமி மூலம் ஆதாயம் கிட்டும். மகப்பேறு பாக்கியம் கிட்டும். திருமண முயற்சி கைகூடும். எதிர்ப்பு, தொல்லை விலகும். நீண்ட கால கடன் நிலுவைகள் கைக்கு கிடைக்கும். கொடுக்கல், வாங்கல் சிக்கல் தீரும். கல்வி வளம் மேலோங்கும். உத்தியோகத்தில் இடம் மாற்றம் ஏற்படும். சிலருக்கு வீடு மாற்றம் உண்டாகும். ராகு / கேது /சனி வழிபாடு

**கும்பம்** : எதிர்ப்புகள் விலகும் வாரம். உத்தியோகத்தில் நல்ல பெயர் கிட்டும். ஊதிய உயர்வு உண்டு. சொத்துகள் சேரும். வழக்கு வெற்றி அளிக்கும். வராத பணம் கைக்குக் கிட்டும். கல்வி வளம் மேலோங்கும். திருமணம் கைகூடும். ராகு / கேது / குரு வழிபாடு செய்து வருதல் நற்பலனை அளிக்கும்.

**மீனம்** : வெளிநாட்டு அழைப்பு வந்து சேரும். உத்தியோகத்தில் நற்பலன் ஏற்படும். குழந்தை பாக்கியம் கிட்டும். கொடுக்கல், வாங்கல் சிக்கல் தீரும். பூர்வீகச் சொத்து கைகொடுக்கும். குழந்தைகளால் மனமகிழ்ச்சி ஏற்படும். திருமணம் கைகூடும். லெட்சுமி கடாக்ஷம் கிட்டும். ஆஞ்சநேயர் வழிபாடு நற்பலனைத் தரும்.




## போட்டி முடிவு

கடந்த 14.1.2007 இதழில் அப்துல் கலாமின் சேவைக்கு சல்யூட் அடிக்கும் விதமாக பஞ்ச் டயலாக் எழுதக் கேட்டிருந்தோம். தலா ரூ.250 பரிசு பெறும் சிறந்த 'பஞ்ச்'சுகள் இங்கே...

'வல்லரசு இந்தியா' என்பது உங்கள் தேடல்!
இளைஞர்களுக்கெல்லாம் நீங்கள்தானே ரோல் மாடல்!

- வர்ஷினிப்ரியன், கிழக்கு தாம்பரம்

மாணவரை மதிக்கும் கலாம் - உங்களுக்கு
வருங்காலத் தலைமுறை இடுமே சலாம்!

- முத்தையாதாசன், சென்னை

தேசம் போற்றும் ஜனாதிபதி!
நேசம் கொள்ளும் குணாதிபதி!!

- வாலாம்பாள், திருச்சி

பிஞ்சு மனங்களில் நஞ்சு விதைப்பவர்களுக்கு மத்தியில்
அறிவெனும் அக்னிக் குஞ்சு வளர்க்கும் ஆசான்.

- பா.ஜெயபிரகாஷ், பொள்ளாச்சி



# அறிவின் நிறைவே...

முன்னேறும் இளைஞர்களுக்கு ஒரு எடுத்துக்காட்டு... கலாம் போல ஒருவரை நீ காட்டு!

- சென்னிமலை சி.பி.செந்தில்குமார்

இளைய ரோஜாக்களை நேசிப்பதில் இன்னொரு நேரு - புது
இந்தியாவைப் பற்றி இவரிடம் உண்டு கனவுகள் நூறு!

- த.சி.பாலு, சென்னை

மாணவனைக் கண்டால் தட்டிக் கொடுப்பாய்...
இளைஞனைக் கண்டால் தட்டியெழுப்புவாய்!

- கி.நித்யா, கும்பகோணம்

அறிவின் நிறைவே அப்துல் கலாம்
ஆற்றலின் திறனே உனக்கொரு சலாம்!

- டி.என்.கிருஷ்ணமூர்த்தி, சென்னை



அக்கம் பக்கம்

# புதிய சர்ச்சை!

**பி**ள்ளைகள் பெற்றோரை அனாதைகளாக விட்டுவிட்டால், தண்டனை தர வகை செய்யும் சட்டம் வரப் போகிறதாம். கவனிக்காத பிள்ளைகளுக்குச் சொத்தை எழுதி வைத்திருந்தாலும் பெற்றோர்கள் எழுதிய உயிலை, மாற்றி எழுதலாம். வரவிருக்கும் சட்டத்தின்படி பெற்றோரைக் கவனிக்காமல் விடுவது குற்றமாகக் கருதப்பட்டு, தண்டனை கிடைக்கும். அது சரி, இதுபோல அரசியலில் அனாதைகளாக்கப்பட்டவர்களுக்கு மறுவாழ்வு தர ஏதாவது சட்டம் வருமா?

“**இ**ரண்டு பேரையும் ‘எஸ்.ஜி’ என்று குறிப்பிடுவார்கள். நாங்கள் இரண்டு பேருமே ஜூலை மாதம் பிறந்தவர்கள். இரண்டு பேருமே இந்திய அணியின் கேப்டனாக இருந்திருக்கிறோம். ஆனால் அவர் என்னைவிட நிறைய சாதனைகள் புரிந்திருக்கிறார்” - இப்படிப் புகழ்ந்து பேசியவர் சுனில் கவாஸ்கர். யாரைப் புகழ்ந்து பேசினார்? சவுரவ் கங்குலியைப் பற்றித்தான்! ‘சவுரவ் கங்குலி: கிரிக்கெட்டின் மகாராஜா’ என்ற புத்தகத்தை கொல்கத்தாவில் வெளியிடும்போதுதான் கவாஸ்கர் இப்படிப் பேசியிருக்கிறார்.



**கு**ஜராத் முதலமைச்சர் நரேந்திரமோடி அவ்வப்போது ஏதாவது புது முயற்சி செய்வதும், அது சர்ச்சைக்குள்ளாவதும் சகஜம். லேட்டஸ்ட்டாக மோடி புது அறிவிப்பு ஒன்றைச் செய்திருக்கிறார். புகழ்பெற்ற ‘இந்தியன் இன்ஸ்டிடியூட் ஆஃப் மேனேஜ்மென்ட்’டுக்கு இணையாக ‘இந்தியன் இன்ஸ்டிடியூட் ஆஃப் டெம்பிள் மேனேஜ்மென்ட்’ என்ற அமைப்பை ஆரம்பிக்கப் போகிறாராம். இதில் ‘கோயில்களைத் திறம்பட நிர்வகிப்பது எப்படி?’ என்று சொல்லித் தரப்படுமாம்! இதுவும் சர்ச்சையாகும் என்று கூறப்படுகிறது.



**சி**.பி.எம். நிர்வாகக் குழு உறுப்பினர் சீதாராம் யச்சூரிக்கு, இந்தியாவுக்கு விஜயம் செய்த சீன ஜனாதிபதி, ஒரு ஹைடெக் ஐபாட்டை பரிசளித்து விட்டுப் போனார். ஆனால் அதை யச்சூரியால் பயன்படுத்த முடியவில்லை. அதன் விளக்கக் கையேடும் சீன மொழியில் இருந்தது தான் காரணம். இப்போது எப்படியோ கஷ்டப்பட்டு, அதன் ஆங்கில வடிவத்தைப் பெற்றுப் பயன்படுத்த ஆரம்பித்திருக்கிறார் யச்சூரி!

- எஸ்.சி.எம்




# காலணி மார்க்கெட்

'தலைசிறந்த முக்கியச் செயலதிகாரி' என்ற விருதை மத்திய வணிக அமைச்சகத்திடமிருந்து பெற்றிருக்கிறார் ஆதேஷ் குப்தா. லிபர்ட்டி ஷூ நிறுவனத்தை நிர்வகிக்கும் இவரை கர்னாலில் (ஹரியானா) உள்ள தலைமையகத்தில் சந்தித்துப் பேசினோம். தம் நிறுவனம் மற்றும் காலணி மார்க்கெட் குறித்த கருத்துகளை நம்மிடம் பகிர்ந்து கொண்டார்...

"மற்ற பிரிவுகள் மாதிரி இல்லை காலணிப் பிரிவு. இந்தக் கோணத்தில் பார்க்கும்போது எங்கள் நிறுவனத்தின் இந்த முன்னேற்றத்தை ஒரு சாதனை என்றுதான் சொல்ல வேண்டும்" என்று தொடங்கினார்.

**காலணிச் சந்தைக்கு அப்படி என்ன தனித்துவம்?**

"இதில் பெரும்பங்காக உள்ளவை சிறுதொழில் பிரிவில் அடங்கும் நிறுவனங்கள். 2001 வரை இதில் 90 சதவிகிதம் குடிசைத் தொழிலாக விளங்கி வந்தது. எனவே அவர்களைப் பாதுகாக்க வேண்டுமென்பதற்காகவே எங்களை முடக்கி வைத்திருந்தது அரசு ஏகப்பட்ட கட்டுப்பாடுகள்.

நாங்கள் சந்திக்கும் சவால்கள் ஏராளம். ஆடைப் பிரிவை எடுத்துக் கொண்டால், ஐம்பதுகளின் தொடக்கத்தில் அரசு கட்டுப்பாடுகளைத் தளர்த்தத் தொடங்கி விட்டது. பவர்லூம் நிறுவனங்கள் நிறைய நூல் இழைகளைத் தயாரித்தன. பயன்படுத்தப்பட்ட இழைகள், விலை குறைந்த ஆடைத் தயாரிப்பில் மீண்டும் பயன்படுத்தப்பட்டன.

ஆனால், காலணிப் பிரிவில் அப்படி இல்லை. 2001 வரை இங்கு கச்சாப் பொருளைத் தயாரிக்கும் திறனே இல்லை. ஆடைத் தொழிலைவிட காலணித் தொழில் முப்பது வருடங்கள் பின்தங்கி இருக்கிறது.

ஆடைத் தொழிலில் முத்திரை பதித்தவர்களைப் போல நாங்கள் ஒன்றும் மூன்று நான்கு தலைமுறைகளைக் கண்டவர்கள் அல்லர். எனவே சந்தையைப் புரிந்து கொள்ளும் அனுபவத்தையும் நாங்களே வளர்த்துக்கொள்ள வேண்டியிருக்கிறது."

**உங்களுடைய காலணிகள் எந்தப் பகுதியில் அதிகமாக விற்பனை ஆகின்றன?**

"பொருளாதார ஏற்றத்தாழ்வுகளைப் பொருத்தே விற்பனை இருக்கும். வட இந்திய மாநிலங்கள் தொடக்கத்தில் பொருளாதார மேம்பாடு கண்டவையாக இருந்தன. தென்னக மக்கள் சமீப காலமாகத்தான் ஃபேஷனில் ஈடுபாடு காட்டத் தொடங்கியிருக்கிறார்கள். சில வருடங்களுக்கு முன்பு வரை இருந்த ஹவாய் அல்லது அதுபோன்ற சாதாரணச் செருப்பே போதும் என்ற நிலை மாறி வருவதால், அங்கும் அதிக விலை

கொண்ட காலணிகளுக்கான மார்க்கெட் விரிவடைந்து வருகிறது. தவிர, விற்பனை வரி என்பது மாநிலத்துக்கு மாநிலம் மாறுபடுவதாலும் சில சங்கடங்கள் இருந்தன. கூட்டு மதிப்பு வரி (வாட்) அறிமுகமாகியிருப்பதால் இப்போது பரவாயில்லை.

பான்டலூன் போன்ற நிறுவனங்களுடன் டை-அப் வைத்துக்கொள்ளத் தொடங்கியிருக்கிறோம். இனி காலணி மார்க்கெட்டில் எங்கள் போட்டி மேலும் கடுமையானதாக இருக்கும்.

இப்போது எங்கள் காலணிகளின் மார்க்கெட் ஷேர் சுமார் 25 சதவிகிதம். ஆண்டுதோறும் எங்கள் விற்பனை அதிகரித்துக் கொண்டே வருகிறது. ஜெர்மனி, அமெரிக்கா போன்ற பல வெளிநாடுகளுக்கு எங்கள் காலணிகள் ஏற்றுமதியாகின்றன."



• ஆதேஷ் குப்தா

## சவால்கள்!

**காலணி மார்க்கெட்டின் வருங்கால சவால்கள்..?**

"சீனா ஒரு முக்கியப் போட்டியாளராக விளங்கும். என்றாலும் ஜனநாயக அமைப்பு, ஆங்கில அறிவு போன்றவற்றின் காரணமாக வெளிநாடுகள் இந்தியாவில் அவுட்சோர்ஸ் செய்யும் வாய்ப்புகள் இன்னமும் தாராளமாகவே உள்ளன. உலக அளவில் வணிக எல்லைகளை விவரிக்க வேண்டிய காலம் இது. காலணி மார்க்கெட்டும் வித்தியாசமான சவால்களை நிச்சயம் சந்திக்கும்."

**- ஜி.எஸ்.எஸ்.**































ஜனங்களின் சாமி

**ப**ழையனூர்னு ஒரு ஊரு. அந்த ஊர்ல வேலவன் பட்டர்னு ஒருத்தரு வாழ்ந்துக்கிட்டு இருந்தாரு. கோயில் காரியங்களப் பார்த்துக்கறதுதான் அவரு வேலை. பட்டருக்குப் பரம்பரையாவே ஏகப்பட்ட சொத்து சுகங்கள் இருந்துச்சு. பொண்டாட்டியோட சந்தோசமாக் குடும்பம் நடத்தி நிம்மதியா வாழ்ந்துக்கிட்டு இருந்தார்.

அந்த ஊர்ல ஒரு தாசி இருந்தா. அவ பேரு சிவகாமி. பேராசை பிடிச்சவ. அவ வாலிபமா இருக்கும்போது பல தனவந்தர்களைக் கைக்குள்ள போட்டிருந்தா. அவ வயித்துல பிறந்த பெண் பிள்ளை லெட்சுமி. பேருக்கு ஏத்தாப் போல மகாலெட்சுமியாட்டம் அழகா இருப்பா. அவளுக்கு இப்படி வாழறது பிடிக்கல. யாரையாவது காதலிச்சிக் கல்யாணம் பண்ணிக்கிட்டு, பிள்ளை குட்டிகள் பெத்து கௌரவமா வாழணும்னு ஆசை.

சிவகாமிதாசியோ தன் மகளோட அழகை வச்சிக் கொள்ளை கொள்ளையாச் சம்பாத்தியம் செய்யணும்னு நினைச்சா.

இந்தச் சமயத்துலதான் வீட்டுல ஏதோ சடவுன்னு சொல்லி வேலவன் பட்டர் ஒருநாள் சிவகாமிதாசி வீட்டுப் படிக்கட்டுல காலவ வச்சார். சிவகாமிதாசி, வேலவன் பட்டரை வரவேற்று உபசரித்து, அவரைத் தன் மகளுக்கு அறிமுகப்படுத்தினா.

தாசி மகள் வீடு தேடி வந்த ஆம்பளையை 'வராதே'ன்னு சொல்ல முடியுமா...? அதனால அருந்தப் பாலும் சாப்பிடப் பண்ட பலகாரங்களும் தரிக்கத் தாம்புலமும் கொடுத்தாள்.

பட்டரை வளைச்சிப் போட்டு, அவரிடம் இருக்கும் செல்வங்களையெல்லாம் கறந்துறணும்னு நினைச்சா, தாய்க் கிழவி.

தாசி மகள் பட்டரிடம் அன்போட பழகினாள். பட்டருக்கும் தாசி மகளின் அன்பும் ஆதரவும் பிடிச்சிருந்திச்சு.

'லெட்சுமியை நாம மட்டும்தான் வச்சிக்கிடணும். அன்னிய ஆம்பளை யாரும் அவளைத் தொடக்கூடாது'ன்னு நினைச்சார் பட்டர். அதைத் தாய்க் கிழவியிடமும் சொன்னார்.

சிவகாமிதாசி இதுதான் பட்டரின் பொன் பொருளை எல்லாம் கறக்க நல்ல தருணம்னு நினைச்சி அவர்ட்ட சம்மதம் சொன்னாள்.

தாசி மகளுக்கு இப்ப ரெட்டை சந்



# பழையனூர் நீலி!

பட்டர் வீட்ல 'பொன் பொருளை யெல்லாம் தாசி வீட்டுல கொண்டு போய்க் கொடுத்துட்டியே'ன்னு சண்டை போட்டாள் அவர் பொண்டாட்டிக்காரி.

நிம்மதி இழந்த பட்டர், ஊரை விட்டே கிளம்பிக் காட்டு வழியா நடக்க ஆரம்பிச்சார்.

தாசி மகள் பட்டரைப் பிரிஞ்சி வாழ முடியாதுன்னு நினைச்சா. தன் தாயி செஞ்சது கொஞ்சமும் நியாயமாப்படலை அவளுக்கு. தன்னிடம் உள்ள நகை நட்டுக்களை எல்லாம் மடியில கட்டிக்கிட்டு பட்டரைத் தேடி ஊரை விட்டுக் கிளம்பிக் காட்டுக்குப் போனாள்.

காட்டுல வச்சி பட்டரைச் சந்திச்சா. அழுது கண்ணீர் விட்டா. தான் மடியில் கட்டிக்கொண்டு வந்த நகைகளை எல்லாம் காட்டி, "நானும் உங்களோட வாரேன். நாம வேறு எங்காவது ஒரு ஊருக்குப் போயி தாலி கட்டிக்கிட்டுப் பொண்டாட்டி புருசனா வாழலாம்"னு சொன்னா.

பட்டர் தாசி மகளை ஏமாத்தி அவளிடம் உள்ள நகைகளைக் கைப்பத்தணும்னு நினைச்சார். அதனால அவளை

தோசமாப் போச்சி. பட்டரோடேயே இருந்து காலத்தைக் கழிச்சிரலாம்னு நினைச்சா. ஆனா, தாய்க் கிழவி தன் மகளின் அழகைக் காட்டி பணம், நகை நட்டு, பண்ட பாத்திரம் வேணும்னு நச்சரிச்சா.

தாசி மகள் மேல கொண்ட மோகத்தால ,பட்டர் தன்னிடம் உள்ள பொன் பொருளை எல்லாம் கொஞ்சம் கொஞ்சமாக் கொண்டு வந்து தாசி வீட்டுல கொடுத்துட்டார். கடைசியில கோயில் நகையையும் களவாண்டு வந்து தாய்க் கிழவியிடம் கொடுத்தாரு. பேராசை பிடிச்ச அவ "இன்னும் கொண்டா, கொண்டா''ன்னு ஆலாப் பறந்தா. ஆனா மகள், தாயிடம் "அவரிடம் உள்ள செல்வத்தை எல்லாம் கொண்டாந்து நம்மட்ட கொடுத்துட்டாரு. நீ ஏன் இன்னும் இப்படி காசு, பணம்னு பேயா அலையிற? அன்புன்னா என்னான்னு உனக்குத் தெரியாதா?"ன்னு கேட்டுச் சண்டை போட்டாள்.

'தன் மகள் தன்னைப் போல இல்லை. பட்டரிடம் பாசம் வைக்கிறாள். இது எதிர்காலத்துக்கு நல்லதல்ல. அத்தோட பட்டரிடம் இனி கறப்பதற்கும் ஏதுமில்லை'ன்னு நினைச்ச தாய்க்கிழவி, வீட்டுக்கு வந்த பட்டரிடம் "இனிமேல் நீர் இங்கே வரக் கூடாது"ன்னான்.

அணைத்துக் கொஞ்சிக் குலவினார். அவளும் மனம் மகிழ்ந்து அவர் மடியில் படுத்துத் தூங்கினாள்.

அவ நல்லா கண்ணசந்து உறங்கும் போது, மடியில் இருந்து இறக்கித் தரையில் கெடத்திட்டுப் பக்கத்தில்

கிடந்த ஒரு பெரிய கல்லைத் தூக்கி அவ தலையில போட்டுக் கொன்னுட்டார்.

லெட்சுமி அந்த இடத்துலேயே துடிதுடிச்சி செத்துட்டா. பிறகு அவ மடியில் இருந்த நகை நட்டுக்களை எல்லாம் எடுத்துக்கிட்டுப் புறப்படும்போது அவருக்குத் தண்ணீர் தாகம் எடுத்துச்சி. பக்கத்துல இருந்த ஒரு கிணத்துக்குள்ள இறங்கினாரு தண்ணீர் குடிக்க. அந்தக் கிணத்துப் படிக்கட்டுல காலை வச்சி இறங்கும்போது, ஒரு படிக்கல்லு பொந்துல இருந்த பாம்பு பட்டரைக் கொத்திட்டு. உடனே பட்டர் நிலை தடுமாறி கிணத்துக்குள்ள விழுந்து செத்துட்டார்.

ஆடு, மாடு மேய்க்கக் காட்டுக்கு வந்த பிள்ளைகள் தாசி மகளும், பட்டரும் தனித்தனியே செத்துக்கிடக்கறதைப் பார்த்து ஊருக்குள்ள போயி சேதி சொன்னாங்க.



■ 'நி.நி.பார்த்தேன்' படத்தில் விக்ராந்த்...

## நடிகராகும் டாக்டர்!

அரசியல்வாதி திருமாவளவன் 'அன்புத் தோழி' படத்தில் நடித்தார். மருத்துவர் செரியன் 'நினைத்து நினைத்துப் பார்த்தேன்' படத்தில் நடிக்கிறார். "இருதய நோய் மருத்துவராகவே படத்தில் வரும் டாக்டர் செரியன், எங்களுக்குக் கொடுத்த ஒத்துழைப்பை மறக்க முடியாது. படப்பிடிப்பின் இடையில் இரண்டு வயதுக் குழந்தைக்கு இருதய ஆபரேஷன் செய்துவிட்டு இரத்தக் கறையுடன் வந்து நடித்துக் கொடுத்தார்" என்று நெகிழ்ந்து போய்ப் பேசுகிறார் டைரக்டர் மணிகண்டன். செல்வராகவனின் பாசறையிலிருந்து இயக்குநராகும் முதல் நபர்.

"பாகிஸ்தானைப் பற்றின படம் என்றால், உங்களுக்கு என்ன ஞாபகத்துக்கு வரும்? வெடிகுண்டு, துப்பாக்கி, தீவிரவாதம், ஆவேசம் என்று நீண்டுகொண்டே போகும். பட்டியலுக்கு இங்கே வேலை இல்லை. 'நினைத்து நினைத்துப் பார்த்தேன்' அக்மார்க் மனிதநேயப் படம். பாகிஸ்தானிலிருந்து குழந்தையின் மருத்துவ உதவிக்காக இந்தியாவுக்கு வரும் ஒரு குடும்பத்தின் நல்லது கெட்டதுமான போராட்டத்தைத் துள்ளத் துடிக்கப் பதிவு பண்ணியிருக்கிறோம்" என்கிறார் படத்தின் நாயகனும் நடிகர் விஜயின் தம்பியுமாகிய விக்ராந்த்.

நீண்ட நாளுக்குப் பிறகு இப் படத்துக்கு ஒளிப்பதிவு செய்யும் மதுஅம்பாட், "மதத்தின் பெயராலோ, நாட்டின் பெயராலோ, இனத்தின் பெயராலோ எவரும் உயிர்விடக் கூடாது என்பதை அழுத்தம் திருத்தமாக வலியுறுத்தும் படமாக வளர்ந்து வருகிறது நினைத்து நினைத்துப் பார்த்தேன்" என்றார்.

- கமலா

தாய்க் கிழவி தன் மகன் முகமனிஞ்சி செத்துக் கிடந்ததைப் பார்த்துட்டு அந்த இடத்துலயே தன் நாக்கைப் பிடிங்கிச் செத்துட்டா.

பட்டரின் பொண்டாட்டிக்காரி கெணத்தில பிணமா மிதக்கும் தன் புருசனோட சடலத்தைப் பார்த்து, அவளும் அதே கிணத்துக்குள்ள பாஞ்சு செத்துட்டா. இப்படி பட்டர் குடும்பமும் தாசி குடும்பமும் அழிஞ்சிப் போச்சி.

தாசி குலத்துல பிறந்தாலும் ஒருத்தனோடவே வாழ்ந்து, அவனாலயே கொல்லப்பட்டதால மக்கள் லெட்சுமியை 'நீலி'ன்னு தெய்வமாகக் கும்பிடுறாங்கன்னு கதையைச் சொன்னார் தென்காசி ஜோதிடர் மாடசாமி.

(தொடரும்)

பின்குறிப்பு:- 'நீலி' என்ற ஒரு தெய்வமாக ஒரு பிறப்பில் வாழ்ந்தவள், தன்னைக் கொன்ற பட்டரைப் பழிவாங்க மறு பிறப்பில் இசக்கியாகப் பிறக்கிறாள். 'இசக்கி'யின் கதை அடுத்த இதழில்.




பச்சைக்கிளி முத்துச்சரம்... கௌதம் மேனனின் இயக்கத்தில் வெளிவந்திருக்கும் அண்மைப் படம். இதில் இரு நாயகிகள். ஒருவர் ஜோதிகா; இன்னொருவர் ஆன்ட்ரியா ஜெரேமியா. சரத்தின் மனைவியாக முதல் படத்திலேயே அசத்தியிருக்கிறார்.

படத்தில் நடிக்க ஒப்பந்தமானதிலிருந்து இன்று வரை "பத்திரிகைப் பேட்டியா? நோ!" என்று தவிர்த்து வந்த ஆன்ட்ரியா, கடைசியில் நம்மிடம் பேசினார். அதன் முக்கிய பகுதிகள்:

"எனக்கு சினிமா பின்னணி கிடையாது. சிறு வயது முதலே இசையில் மிகுந்த ஆர்வம் உண்டு. பியானோவில் மேற்கத்திய கிளாசிகல் மியூசிக் கற்றுக்கொண்ட நான், பல மேடை நிகழ்ச்சிகளில் கலந்து கொண்டு பாடி இருக்கிறேன். பல பாட்டுப் போட்டிகளில் கலந்து கொண்டு பரிசுகள் பெற்றிருக்கிறேன்.

பள்ளிப் படிப்பை முடித்தவுடன் என்னை டாக்டருக்குப் படிக்க வைக்க என் பெற்றோர் விரும்பினார்கள். ஆனால் எனக்கு அதில் விருப்பம் இல்லை. சென்னை மகளிர் கிறிஸ்தவக் கல்லூரியில் உளவியல் பட்டப் படிப்பில் சேர்ந்தேன். அங்கேதான் எனக்கு மேடை நடிப்பில் ஆர்வம் ஏற்பட்டது. கல்லூரி நாடகக் குழுவில் இடம்பெற்றேன். தொடர்ந்து 'மெட்ராஸ் பிளேயர்ஸ்' என்ற ஆங்கில மேடை நாடகக் குழுவிலும் பங்கேற்கும் வாய்ப்பு கிடைத்தது.

படிப்பை முடித்த பிறகு, ஒரு நண்பரும் நானும் இணைந்து மியூசியம் அரங்கத்தில் ஒரு ஜாஸ் இசை நிகழ்ச்சிக்கு ஏற்பாடு செய்து, அதனை வெற்றிகரமாக நடத்தி முடித்தோம். அந்த இசை நிகழ்ச்சிக்கு நல்ல பாராட்டு கிடைத்தது.

ரேவதி, தூர்தர்ஷனுக்காக இயக்கிய 'வேருக்கு நீர்' என்ற டெலிஃபிலிமில் நடிக்க எனக்கு வாய்ப்பு வந்தது; அதை ஏற்றுக் கொண்டேன். ராஜம் கிருஷ்ணன் எழுதிய கதை அது. எழுபதுகளில் நடக்கும் அந்தக் கதையில் வசனங்கள் வழக்கமான பேச்சுத் தமிழில் இல்லை; சற்றுக் கடினமானதாக இருந்தன. நான் பிறந்து வளர்ந்தது சென்னையில்தான். இருந்தாலும், இலக்கணச் சுத்தமாக தமிழ் பேசிப் பழக்கமில்லை. ஆனாலும், அந்தத் தொடருக்கு வசனம் எழுதிய ரோகிணி, என் பதற்றத்தைக் குறைத்தார்; வசனங்களைச் சரியாக உச்சரிக்க எனக்குக்

# பதற்றம்... பரவசம்...



கற்றுக் கொடுத்தார். எனக்கு அது ஒரு புதிய அனுபவமாக இருந்தது. அந்தப் படத்தில் நடித்ததோ பரவசமான அனுபவம்.

என் திறமையை முழுமையாக வெளிப்படுத்த அண்மையில் எனக்கு இரண்டு வாய்ப்புகள் கிடைத்தன. ஒன்று 'டார்க் ஹார்ஸ்'. இது அண்மையில் வாழ்ந்து மறைந்த ஒரு மராத்திய எழுத்தாளரைப் பற்றிய ஆங்கில நாடகம். இன்னொன்று 'ரூரல் ஃபான்டசி'. இது அமரர் கல்கியின் 'கணையாழியின் கனவு' சிறுகதைக்கு, ஆங்கிலத்தில் அளிக்கப்பட்ட மேடை வடிவம்.

நான் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தபோது மாடலிங்கிலும் ஈடுபட்டு வந்தேன். மிரிண்டா குளிர்பான விளம்பரப் படத்தில் தோன்றினேன். அதை இயக்கியவர் கௌதம். அந்த அறிமுகத்தின் அடிப்படையில்தான், 'பச்சைக் கிளி முத்துச்சரம்' படத்தில் நடிக்க என்னை அழைத்தார். படத்தின் கதையையும், எனக்குக் கொடுக்கவிருக்கும்




கதாபாத்திரத்தையும் பற்றிச் சொன்னபோது, 'நிச்சயம் ஒரு வித்தியாசமான அனுபவத்தை அளிக்கும்' என்ற நம்பிக்கை எனக்கு ஏற்பட்டது. ஒப்புக் கொண்டேன்.

'பச்சைக்கிளி'யில் நான் தோன்றும் காட்சிகள் பதினைந்து, இருபது நிமிடங்கள்தான் இருக்கும். ஆனால் அந்தக் குறுகிய நேரத்திலும் எனக்கு நடிப்பதற்கு நிறைய ஸ்கோப் இருந்தது.

கிடைக்கும் வாய்ப்புகளையெல்லாம் ஏற்று, நடித்து அதன் மூலமாகப் பணம் சம்பாதிக்க வேண்டும் என்பது என்னுடைய இலட்சியமில்லை. மனதுக்குத் திருப்தியளிக்கும் கதாபாத்திரம் என்றால் மட்டுமே நான் நடிப்பதற்கு ஒப்புக் கொள்வேன். அது நெகடிவ் கேரக்டராக இருந்தாலும் சம்மதம்தான். அதனால்தான் எனக்கு வந்த டி.வி. சீரியல் வாய்ப்புகளைக்கூட நான் ஒதுக்கித் தள்ளி விட்டேன். சிலர் கதை சொல்லும்போது கேரக்டரைப் பிரமாதமாக விவரிப்பார்கள். படமோ சப்பென்று இருக்கும். அதனால் கதை, கேரக்டர் மட்டுமின்றி படத்தின் டைரக்டர் யார் என்பதையும் பார்த்துத்தான் ஒப்புக் கொள்வேன்."

**"மேடையில் நடிப்பதற்கும், சினிமாவில் நடிப்பதற்கும் முக்கியமான வித்தியாசம்..?"**

மேடை நடிப்பிலே ஒரு தொடர்ச்சி இருக்கும். அங்கே இசை கூட லைவ். நடிப்புக்குப் பார்வையாளர்களது ரியாக்ஷன் என்ன என்பதும் உடனடியாகத் தெரிந்துவிடும். ஆனால் சினிமாவில் நடிப்பது அப்படி இல்லை. இரண்டரை மணி நேரப் படத்தைப் பல மாதங்களில் இடைவெளிவிட்டு எடுக்கிறபோது நடிப்பில் ஒரு 'ஃப்ளோ' இருக்காது. சினிமா நடிப்பு என்பது கேமராவுக்கான நடிப்பு. மேடை நடிப்பு என்பது ரத்தமும் சதையுமாக எதிரில் உட்கார்ந்திருக்கும் ரசிகர்களுக்கான நடிப்பு."

**"தொடர்ந்து நடிக்கும் உத்தேசமிருக்கிறதா?"**

"இல்லை. நடிப்பு, திரைப்படம் குறித்து அமெரிக்காவில் மேற்கொண்டு படிக்க ஆசை."

**- எஸ்.சந்திரமௌளி**




■ **ஷாமினி**

**டேபிள் டென்னிஸ் விளையாட்டில் தமிழ்நாடு ரொம்பக் கெட்டி. எப்போதும் நம்பர் ஒன் வீரர்கள் நம்மவர்கள்தான். இந்த வரிசையில் இப்போது ஷாமினி.**

**சாதனை:** சமீபத்திய நேஷனல் போட்டியில தமிழ்நாட்டுக்குத் தங்கம்.

**சொந்த ஊர்:** பிறந்தது நாகர்கோவில், வளர்ந்தது கல்பாக்கம், சாதிப்பது மைலாப்பூரில்.

**படிப்பு:** எம்.ஓ.பி.யில் பி.காம். மட்டையைத் தூக்கும் நேரம் போக புக்கைத் தொடறேன்.

**டேபிள் டென்னிஸ் :** ஆட்டம் புரியறதுக்குள்ளே முடிஞ்சுடுது. வர்ற கூட்டம் குறைவுதான். ஆனாலும் நாளைக்கு நிக்கப் போறது இந்த ஆட்டம்தான். எல்லா ஸ்கூல்லயும் குட்டீஸ்கூட டேபிள் டென்னிஸ் ஆட ஆசைப்படுதுங்க.

**டயட்:** எனக்கு டயட்டா? நல்ல ஜோக்! ஆனாலும் மேட்ச் ஆடும்போது ஜூஸ், சாக்லேட் மட்டும்தான் விழுங்குவேன்.

**சென்டிமெண்ட்:** மேட்ச்சுக்கு முன்னாடி அம்மா வைத்துவிடும் விபூதி.

**வணக்கம்:** பெற்றோர் மற்றும் கோச்சுகள் முரளிதரன், ஸ்ரீனிவாசராவ். இவங்க உழைப்புக்கு முன்னாடி நான் தூசு.

**ஆட்டம் தொடருமா? :** பாதியிலேயே கைகழுவறதுன்னா எப்பவோ விலகியிருப்பேன். நேஷனல் ஜெயிச்சுருக்கேன். இன்னும் ஒலிம்பிக்ஸ் வரைக்கும் போகணும். நம்ம ஆட்டம் இப்பத்தானே ஆரம்பிச்சிருக்கு.

**பொழுதுபோக்கு:** விளையாட்டு வீரர்களுக்குப் பொழுதுபோக்கா? விளையாட்டுதான் எங்களுக்குக் கோயில், பொழுதுபோக்கு எல்லாம்.

**கொடுப்பினை:** ஸ்பான்ஸர் முதற்கொண்டு கேட்டதெல்லாம் கிடைக்குது. ஜெயிக்க வேண்டியது மட்டும்தான் என் வேலை.

**வெற்றி சீக்ரெட்:** எதிராளியோட வீக் பாயிண்ட்.

**எதிர்பார்ப்பு:** தமிழக முதல்வர் வாழ்த்து.

**- ச.ந.கண்ணன்**

படம்: **ஸ்ரீஹரி**



# ஆட்டம் ஆரம்பம்!



தொடர்கதை

# வேகம்

முத்துராமனுக்கு அது மிகவும் புதிய அனுபவமாக இருந்தது. அவனுக்குத் தெரிந்த அவனுடைய அப்பா, ஒரு காலத்தில் மிகத் தீவிரமான கட்சிக்காரர். வாரம் ஒரு நாள் அல்லது இரண்டு நாட்கள் இரவில் வீடு தங்குவார். அந்தத் தினங்களிலும் அவரைப் பார்க்க யாராவது வந்துவிடுவார்கள். வாசலில் இதே கயிற்றுக் கட்டிலில் அமர்ந்து கட்சி அரசியல் பேசிவிட்டு, வந்தவரை வழியனுப்பி வைத்துவிட்டு அப்படியே படுத்துவிடுவார். முத்துராமன் கண் விழிக்கும் காலைப் பொழுதுகளில் அநேகமாக அவர் வீட்டை விட்டுப் புறப்பட்டிருப்பார்.

கட்சியின் நம்பிக்கைக்குரிய பேச்சாளர்களுள் ஒருவராக அவர் பிராந்தியத்தில் பிரபலம். இருபது பேர் கூடும் கூட்டத்தை நாற்பதாக்குவதற்குக் கண்டிப்பாக அவர் அந்தக் காலத்தில் தேவைப்பட்டிருக்கிறார்.

ஒவ்வொரு கூட்டத்தின் முடிவிலும் நூற்று இருபத்தைந்து ரூபாய் அவருக்குக் கிடைக்கும். தவிரவும், ஒன்றிரண்டு சோடாக்கள். தமிழரசன் பேச்சுக்குத் தமிழ்நாட்டிலேயே எதிர்ப்பேச்சில்லை என்று மாவட்டச் செயலாளர் ஒருமுறை அவரைப் புகழ்ந்திருக்கிறார். கட்சிப் பத்திரிகையில் ஆறு முறை அவரது பாஸ்போர்ட் சைஸ் புகைப்படத்துடன் கூட்ட விவரம் வெளியாகியிருக்கிறது. இரண்டு முறை நெற்றியில் ரத்தம் வரும் அளவுக்கு அடிபட்டிருக்கிறார். கட்சியின் இரண்டாம் கட்டத் தலைவர் ஒருவர் வீடு வந்து நலம் விசாரித்துப் போனதற்குச் சாட்சியாகப் புகைப்படம் இருக்கிறது.

எம்.எல்.ஏ. ஆகியிருக்கலாம். ஏனோ முடியாமல் போய்விட்டதில் அவர் அரசியலிலிருந்து விருப்ப ஓய்வு பெற்றுக்கொண்டு விட்டார். அந்த விஷயத்தில் குடும்பத்தில் அனைவருக்குமே வருத்தம்தான். முத்துராமனின் தாத்தா, சித்தப்பாக்கள், மாமன்கள் அனைவரும் காரணம் புரியாமல் பலநாள் இதைப் பற்றிப் பேசிப் பேசி மாய்ந்திருக்கிறார்கள்.

'வுட்றா... அவ்ளோதான். என்னால இதுக்கு மேல முடியல. எம்புள்ள சாதிப்பான் போ..' என்று ஒரு வரியில் முடித்துக்கொண்டு எழுந்து போய்விடுவார். முத்துராமன் ஒரு சமயம் தன் அம்மாவிடம் இது குறித்துப் பேசியிருக்கிறான்.

'மருவாத இல்லாத எடத்துல என்னாத்துக்குப் பொழங்கிட்டுக் கெடக்கணும்? அவுரு வூட்லயே கெடக்கட்டும். என் ஒடம்புல தெம்பு இருக்கற வரைக்கும் நான் ஒழைச்சி சோறு போடுவேன்' என்று சொன்னாள்.

அப்பாவின் அரசியல் துறவறத்துக்கு ஒரு வகையில் அம்மா காரணமாக இருந்திருப்பாளோ என்றுகூட முத்துராமன் யோசித்திருக்கிறான். ஆனால் பெண்கள் சொல்லி, விலகக்கூடிய விஷயம் அல்ல அது. ஒரு ஆர்வம் போலத்தான் மனத்தில் விழுகிறது. மெள்ள மெள்ள உடம்பினுள் பரவி, ஒவ்வொரு நரம்பிலும் நிரம்பிவிடுகிறது. பிறகு கட்சிக் கொடியின் நிறம் மானசீகமாக ரத்தத்தில் தோய்ந்து, ரத்தத்தின்

நிறத்தை மாற்றித் தன்னுடைய நிறத்தை ஏற்றிவிடுகிறது. வெள்ளைச் சட்டைக்கும் வெள்ளை வேட்டிக்கும் மனம் விருப்பப் படுகிறது. படியச் சீவிய தலையில், பணிவு வரவழைத்துக் கொள்ளும் இரு கரம் கூப்பிய வணக்கத்தில், மேலான அரசி யல்வாதியாகச் சித்தம் உணர்கிறது. யார் சொல்லியும் இதை மாற்றிக்கொள்ள முடியும் என்று முத்துராமனுக்குத் தோன்றவில்லை.

"அப்படி நெனைக்காதடா... உங்கம்மா என்னைத் தடுத்ததில்ல. ஆனா எல்லாப் பொம்பளைங்களும் உங்கம்மா மாதிரி இருந்துற மாட்டாளுங்க. புருசன் முந்தா னைக்குள்ள இருக்கணும்னு நெனச் சாக்கூட பரவால்ல... இப்பல்லாம் பொண்ணுங்க முந்தானையாவே அவந்தான் இருக்கணும்னு நெனைக் கறாங்க... நாஞ் சொல்றது புரியுதா? தன்னைத் தவிர இன்னொரு விசயத்துல அக்கறை காட்ற புருசன யாருக்கும் புடிக்காம போயிருது, முத்து..."

ஆடிப்போய்விட்டான் முத்துராமன். அவன் இப்படி உட்கார்ந்து சொந்த விஷயம் பேசக் கூடிய தந்தையை

# 9

இத்தனை வருடங் களில் முதல் முறை யாகச் சந்தித்திருந் தான். பரீட்சை எழு தாதபோது ஏன் எழுதவில்லை என்று கேட்காத தந்தை. கட்சிக் கூட்டங்களுக்குப் போகத் தொடங்கியபோது எச்சரிக்கையாகக் கூட ஏதும் சொல்லாத தந்தை. பலநாள் வீட்டுக்கே வராமல் சுற்றிக் கொண்டிருந்த போதும் கண்டுக்கொள்ளாத மனிதர். ஒரு திருமணம் என்று நிச்சயமானதும் இத்தனை அக்கறை, இத்தனை கரிசனம் காட்டக்கூடும் என்று அவன் நினைத் திருக்கவில்லை.

"புரியுதுப்பா... ஆனா யாருக்காகவும் நம்ம லட்சியத்த விட்டுற முடியாதில்ல? எனக்கு அரசியல்தாம்பா மொதல்ல. குடும்பமெல்லாம் அப்பாலதான்" என்றான் மெதுவாக.

நீண்ட நேரம் அவர் மௌனமாக அமர்ந்திருந்தார். ஒரு பெருமூச்சு எழுந்தி ருக்க வேண்டும். பிறகு மெள்ளச் சொன் னார்... "நானும் இப்படிச் சொல்லிக்கினு திரிஞ்சவன்தான். திரிஞ்சத நெனச்சி



இப்பவும் வருத்தப்படல. ஆனா வூட்டுக்கும் கொஞ்சம் செஞ்சிருக்கலாம்னு எப்ப வாச்சும் தோணுது. ப்ச்... கட்சி, கடவுளெல்லாம் காலணா காசு கையில இருந்தா இன்னும் நல்லாருக்கும் முத்து. காசில்லாதப்பதான் நமக்கு இதுலல்லாம் புத்தி நிலைக்குது. தப்பிச்சிக்கத்தான் இப்பிடி அலையறமோன்னு சமயத்துல தோணிரும். எளவு, நம்ம கட்ன பாவத்துக்கு அவுங்களும் கஸ்டப்பட்டாவணும். பாவம், யாரப்போயி திட்டுவா? எப்பிடித் தன்னோட ஆத்தாமையத் தீத்துப்பா? 'சர்தான் கத்திக்கினு போ'ன்னு சொம்மா கெடந்துருவேன். கவனிச்சிருக்கியா?"

கவனித்திருக்கிறான். ஆனால் அதற்கு இதுதான் அர்த்தமாக இருக்கும் என்று யோசித்ததில்லை. தனக்குத் தெரியாத நூலிழை ஒன்றில் தன் தந்தை ஒரு மாய மணி கோத்துக் கொண்டிருக்கிறார் என்று இப்போது உணர்ந்தான். ஆயிரம் கஷ்டங்களுக்கு இடையிலும் வீடு சிதறிவிடாமல் கட்டிக்காக்கிற மணி.

"அதச் செய்யின்னுதான் உன்னாண்ட சொல்றேன். நீ இஸ்டப்பட்டபடி அரசியல்ல முன்னுக்கு வரணும்னுதான் நானும் நெனைக்கறேன். ஆனா வூட்ட லேசா நெனச்சிராத. ஒலகத்துல இருக்கற எல்லா பொம்பளைங்களும் நல்லவங்கதான், மாமியாராவும் மருமவளாவும் ஆகாத வரைக்கும். ஆயிருச்சின்னா எப்ப வேணா பத்திக்கும். அப்பிடி ஒரு நெலம வந்து நீ வூட்டப் பாக்காம ஊர் மேஞ்சிக்கிட்டிருந்தன்னா, மக்கி மண்மேடா ஆயிரும் முத்து. தனியா போவணும்னுவா. அவ மூஞ்சிய திருப்பிக்கினு பூச்சி காட்டுவா. இவ மூக்க சிந்திக்கினு ஒப்பாரி வெப்பா. பாக்கச் சகிக்காது."

அவனுக்கு சுவாரஸ்யம் வந்துவிட்டது. நெருங்கி அவரருகே அமர்ந்து, "நீ எப்பிடிப்பா சமாளிச்ச?" என்றான் புன்னகையுடன்.

"ம்ஹூம்... ரொம்பக் கஷ்டப்பட்டேன். கல்யாணம் கட்டிக்கினு ரெண்டரை வருஷம் தனியாத்தான் இருந்தேன். கிண்டியாண்ட எஸ்டேட் தாண்டி ஆத்தங்கரைல குடிசை ஒண்ணு... பதிமூணு ரூவாய் வாடகைக்கு. நீ பொறக்கற வரைக்கும் அங்கதான். அப்பால என்னிக்கோ ஒரு நாள் வேகம் வந்து, வாடி நம்மூட்டாண்டன்னு இஸ்துக்கினு வந்துட்டேன். கொஞ்சநாள் நல்லா நடிச்சேன், முத்து. வூட்டாண்ட வந்தாலே சவுண்டு வுட்டுக்கினுதான் வர்றது. 'ஐயோ வந்துட்டானே'ன்னு நெனப்பா உங்கம்மா... என்னியவிட எங்கம்மா தேவலன்னு அவ நெனைக்கற அளவுக்கு நடந்துக்கிட்டேன். அப்பால அவளுக்கும் ஒறவு சனம் பழகிருச்சி. உன்ன எல்லாரும் தூக்கிக் கொஞ்ச ஆரமிச்சாங்களா? அவளுக்கு அது போதும்னு தோணிருச்சி. ஊர் மேயற புருசன். ஒறவாச்சும் ஒழுங்கா இருந்தா போதும்னு விட்டுட்டா..."

"நெசமாவே மாமியார், மருமவன்னா ஒத்துப் போவாதாப்பா?"

"தெரியலடா... ஆனா அப்பிடித்தான் இருக்குது. பதறாம குந்திக்கினு யோசிச்சிப் பாத்தா ரெண்டு பேருமே தனித்தனியா நல்லவங்களாத்தான் தெரிவாங்க. நம்ம மேல அவுங்க வெக்கற ஆசைதான் அப்பிடி மோதிக்கச் சொல்லுதுன்னு நினைக்கறேன்."

"அப்ப செரி. புத்தரு கரீட்டாத்தான் சொல்லிக்கிறாரு."



## மெலடி வாசம்!

"இந்திய கிரிக்கெட் அணியில் இடம்பெறத் துடிக்கும் ஒரு தன்னம்பிக்கைத் தமிழன்... மிஸ் இந்தியா அழகிப் போட்டியில் கலந்து கொண்டு மிஸ் இந்தியாவாகி, உலகைத் தன் பக்கம் திரும்ப வைக்க வேண்டும் என்று கனவு காணும் நாகரிக மங்கை... இருவரும் காதல் என்கிற நேர்க்கோட்டில் சந்திக்கும்போது ஏற்படும் திருப்பத்தைத்தான் 'நெஞ்சைத் தொடு' படத்தில் சுவாரஸ்யமாகத் தந்திருக்கிறேன்" என்கிறார் இயக்குநர் ராஜ்கண்ணன். இப்படத்துக்கு இசை ஸ்ரீகாந்த்தேவா.

• 'நெஞ்சைத் தொடு...' படத்திலிருந்து...

"பொதுவா குத்துப் பாட்டுன்னா என் ஞாபகம் வரும். இந்தப் படத்துக்கப்புறம் பாருங்க, மெலடி வாசமும் என் மேல வீசும். ஹரிஹரன், சாதனா சர்க்கம் பாடியிருக்கிற 'புதுவாசம் தந்த புதுமலரே' பாடல் காலத்தைக் கடந்து மக்கள் மனசுல நிக்கும்" என்று கூறும் ஸ்ரீகாந்த்தேவா, 'நெஞ்சைத் தொடு' க்ளைமேக்ஸ் குறித்து நம்மிடம் சிலாகித்துப் பேசினார்...

"நான் நிறையப் படம் பார்த்திருக்கேன். உண்மையாவே இந்தப் படத்தின் க்ளைமேக்ஸ் என்னை சிலிர்க்க வச்சுடுச்சு. புதுசா ஒரு விஷயம் பண்ணியிருக்காங்க. அதற்குரிய அங்கீகாரத்தை மக்கள் நிச்சயம் கொடுப்பாங்க."

- உஷா

தமிழரசன் புன்னகை செய்தார். "அது தப்பிச்சிக்கினு ஓடச் சொல்றதுடா... ஆசை வெக்காதன்னா கரீட்டா ஒண்ணுத்து மேலயும் வெக்காதன்னு அர்த்தம். எல்லாத்தையும் ஆசைப் பட்டுட்டா பிரச்னையே வராது பாரு. தபாரு, பொறந்த பாவத்துக்கு வாழ்ந்து தீக்கணும். வாழுறதுக்கு சாட்சியா நாலு நல்லது பண்ணணும், இவ்ளோதான் மேட்டரு. நடுவுல நாம சுருண்டு வுழுற மாதிரி ஆச்சின்னா அதுக்கு நாமதான் காரணமா இருக்கணும். அடுத்தவங்கள உள்ளார வுட்றக்கூடாது. அவ்ளோதான் புரியுதா?"

பலதும் புரிவது போலவும் எதுவுமே புரியாத மாதிரியும் இருந்தது அவனுக்கு. வியப்புடன் தந்தையைப் பார்த்துக் கொண்டிருந்தபோதுதான் நண்பர்கள் அரக்கப் பறக்க ஓடிவந்தார்கள்.

"இன்னாடா இந்நேரத்துல?" வேகமாக எழுந்து கொண்டான் முத்துராமன்.

"முத்து, கொஞ்சம் வரியா? ஒரு முக்கியமான சோலி..." என்றான் ஜெயச்சந்திரன்.

அவன் திரும்பித் தன் தந்தையைப் பார்த்தான். அவர் சிரித்தார்.

"மணி ஒண்ணாவுதேன்னு பாக்கிறியா? போபோ... இதத்தான் இம்மா நேரம் சொல்லிக்கினு இருந்தேன். உங்கம்மாவுக்கு நீ வந்தது தெரியாதில்ல? அந்த வரைக்கும் ஒக்கே. புரியுதா இப்ப?"

அவனும் சிரித்தான். 'வரேம்பா' என்று கிளம்பினான்.

மாந்தோப்பு ஸ்கூல் அருகே வந்ததும், "இங்கியே உக்காரலாம்டா" என்றான் முத்துராமன். சுற்றுச் சுவரில் தாவி ஏறி முதலில் அவன் அமர்ந்தான்.

"கால் வலிக்குது. அதுவும் இல்லாம காலீல வேலை வேற இருக்குது. இன்னிக்கி மூணு தெருவுல ரோடு போடுறாங்க..."

"மாப்ள ஒரு முக்கியமான விசயம்டா... உங்காளு குப்பத்தாண்ட கொளுத்திப் போட்டது யாருன்னு தெரிஞ்சிருச்சி..."

முத்துராமனுக்குச் சட்டென்று அந்தச் சொற்றொடரின் அர்த்தம் முழுவதுமாக உள்ளுக்குள் இறங்கவில்லை.

'உங்காளு' என்பதைத் தன் எதிர்கால மனைவி என்று மொழிபெயர்த்து உணரச் சில வினாடிகள் தேவைப்பட்டன. உணர்ந்ததும் ஆர்வமாகக் கேட்டான். "யாரு?"

"டென்சன் ஆவாத. நம்ம வெறகு மண்டி மருதன்தான். மேலிடம் சொல்லித்தான் செஞ்சிருக்கான்."

தூக்கிவாரிப்போட்டது அவனுக்கு.

(தொடரும்)

பாலிடிக்ஸ் பஜார்



# காங்கிரஸ் டி.வி!

வாசனும், இளங்கோவனும் இணைந்து விட்டதாகக் கிசுகிசுக்கிறது தமிழக காங்கிரஸ் வட்டாரம். வாசனுக்கு எதிராக அணி திரள முதலில் கிருஷ்ணசாமிக்கு ஓகே சொன்னார் இளங்கோவன். ஆனால், காலப் போக்கில் தன்னை ஸ்திரப்படுத்திக் கொண்ட கிருஷ்ணசாமி, இளங்கோவன் தரப்புப் பிரமுகர்களைத் தன் பக்கம் ஈர்த்துக் கொண்டாராம். அதுதான் இளங்கோவன் கோபத்துக்குக் காரணம். ஆனால் ப. சிதம்பரம் மிகவும் உறுதியாகத் தன்னை ஆதரிப்பதால், தன் பதவிக்கு ஆபத்து இருக்காது என்று நம்புகிறார் சாமி!



• ஐ.ஏ.எஸ். பயிற்சி!



• நம்பும் சாமி



• தீர்த்து வைத்த ஆசை!

காங்கிரஸ் கட்சியும் தமக்காக ஒரு டி.வி. சேனல் துவங்க ஏற்பாடு செய்துவிட்டதாம்! காங்கிரஸ் சட்டமன்ற உறுப்பினரும், வியாபாரப் பிரமுகருமான வசந்தகுமார், தமது பெயரிலேயே துவங்கும் சேனல் காங்கிரஸார் ஆசையைத் தீர்த்து வைக்கப் போகிறது. இதற்காக, தற்போது ஒளிபரப்பாகி வரும் 'இமயம்' என்ற சேனலை வாங்கிவிட்டார்களாம்!

தி.மு.க.வை காங்கிரஸிடமிருந்து பிரிப்பதற்கு விடுதலைப்புலிகள் விவகாரம்தான் சரி என்ற அணுகுமுறையை ஜெயலலிதா கையிலெடுத்திருக்கிறார். சமீபத்தில் புலிகளின் ஆயுதக் கப்பல் பிடிபட்டது, தேசியப் பாதுகாப்பு ஆலோசகர் நாராயணன் 'புலிகள் சென்னையில் பங்கு மார்க்கெட் நிறுவனங்கள் வைத்திருக்கிறார்கள்' என்று சொன்னது ஆகியவற்றை காங்கிரஸின் டெல்லிப் பிரமுகர்களின் கவனத்துக்குக் கொண்டு சென்று 'பிரிக்கும்' வேலையில் ஈடுபட, அ.தி.மு.க.வின் ராஜ்ய சபா உறுப்பினர்கள் முடுக்கிவிடப்பட்டிருக்கிறார்கள்.

தமிழக அரசியல்வாதிகள் தங்கள் கல்விச் 'சேவை'யை நம் மாநிலத்துக்கு வெளியேயும் விஸ்தரிக்க ஆரம்பித்துவிட்டார்கள். தங்கபாலு ஜம்முவில் மருத்துவக் கல்லூரி ஒன்றைத் துவக்க இருக்கிறாராம்!

சைதை துரைசாமி ஆண்டொன்றுக்கு நூறு மாணவர்களுக்கு ஐ.ஏ.எஸ். தேர்வுக்கான பயிற்சி வழங்கத் திட்டமிட்டுள்ளார்.

- சஞ்சயன்

# அம்சமும் ஆற்றலும் அளிப்பவள்!



ஸ்ரீ லலிதா

"அம்பாளுக்குக் கவலை உண்டா?' என்றால் அந்தக் கேள்விக்கு ஆசார்யர் சங்கர பகவத்பாதர்தான் விளக்கம் சொன்னார்:

அம்பாளுடைய முகத்தை வர்ணித்துக்கொண்டே வந்த பகவத்பாதர், அழகாக ஓரிடத்தில் சொல்கிறார்- அவளுடைய புருவங்கள் நெரிந்து காணப்பட்டன என்று - புருவம் இலேசாக நெரிந்திருந்ததாம்!

புருவங்கள் எப்போது நெரித்துக்கொள்ளும்...? கோபம் வருகிறபோது, அல்லது கவலை ஏற்படுகிறபோது அவை நெரித்துக் கொள்ளும்.

இந்த உலகத்திலே உள்ள பிறவிகளை நினைத்து, அவை படுகின்ற துன்பத்தை நினைத்து அவ்வாறு இலேசாக நெரித்துக்கொள்கின்றன அம்பாளுடைய புருவங்கள்!

அம்பாள், தன் குழந்தைகளான ஜீவன்கள் சரியாகச் சண்டை போடுகின்றனரா.. இல்லையா என்று கவலைப்படுகிற சமயத்தில் அவளிடம் யார் போய் நல்ல செய்தி சொல்கிறார்கள் என்றால், மந்த்ரிணியும் வாராஹியும் சொல்கிறார்கள். மனசும் இந்த்ரியங்களும் அவளிடம் போய் "அம்மா! நாங்கள் சரியாகத்தான் சண்டை போட்டோம்; ஜெயித்து விட்டோம்" என்று சொன்னால், "சலனத்தை எதிர்த்துச் சண்டை போட்டு வென்றுவிட்டோம்" என்று சொன்னால் எப்படி இருக்குமோ, அப்படி இருந்தது அந்தக் கூற்று. மனமும் இந்த்ரியங்களும் (மந்த்ரிணி - வாராஹி இவற்றுக்குக் குறியீடு) அம்பாளிடம் சென்று அவள் காலடியில் தஞ்சம் என்று விழுகிறபோது சலனங்களை வெற்றி கொள்ள முடிகிறது.

ஆகவே பாலா என்பவள் ஒவ்வொரு ஜீவனுக்கும் அம்பாள் தருகிற ஆற்றல். தனது அம்சத்தைக் கொடுத்து, ஆற்றலைக் கொடுத்துச் சண்டைக்கு அனுப்புகிறாள். அதாவது, பிறவிப் பெருங்கடலில் போராட அனுப்புகிறாள் என்பதைக் குறிக்கிறது.

கடைசியில் எல்லோரும் சண்டைபோட்டு முடித்த பிறகும் பண்டாஸுரனை விரட்ட முடியவில்லை என்கிறபோது அம்பாளே வருகிறாள் என்பதைப் பார்த்தோம். - நம்மையும் மீறி ஏதோ ஒரு பிரச்னை இருக்கிறது என்றால், அம்பாள் - சாக்ஷாத் பரமேசுவரி - தானே புறப்பட்டு வருவாள். அப்படிப் புறப்பட்டு வரக்கூடியவள் எப்படி வருவாள்...?

## ஜீவனே ரதம்!

முன்பே இது சொல்லப்பட்டிருக்கிறது: மூன்று ரதங்கள் வருகின்றன. அவற்றுள் நடுநாயகமாக சக்ர ராஜ ரதம் வருகிறது. அதிலே அம்பாள் வருகிறாள். சக்ர ராஜ ரதம் எங்கெல்லாம் இருக்கிறதோ, அங்கெல்லாம் கேய சக்ர ரதம் இருக்கிறது. கேய சக்ர ரதம் இருக்கிற இடங்களிலெல்லாம் கிரி சக்ர ரதமும் இருக்கிறது.

கிரி சக்ர ரதம் என்பது ஜீவன்களுடைய ரதம்; கேய சக்ர ரதம் என்பது ஜீவன்களுடைய மனம். ஜீவன் கிரி சக்ர ரதத்தில் வர, அதன் மனம் கேய சக்ர ரதத்தில் கூடவே வருகிறது. அந்த அழ

கான ரதங்கள் புடை சூழ, நடுவிலே சக்ர ராஜ ரதத்தில் திரிபுர நாயகியாக அம் பாள் வருகிறாள்.

## பூஜ்ய ராஜ்யம்!

நாம் பிறவிப் பெருங்கடலில் போட வேண்டிய சண்டைக்காக, அம்பாள் நம்மோடு கூட வருகிறாள் என்பதுதான் பண்டாஸுரன் கதை! அதனால்தான் பண்டாஸுரன் சூன்ய நகரத்தில் இருந்தான்.

கண்ணதாசன் ரொம்ப அழகாகச் சொல்லுவார் ஒரு பாட்டில் - கடவுள் என்பவன் யார்? அதை எப்படி வகுத் துச் சொல்லுவது...?

"தெய்வத்தைப் புரிந்துகொண்டால் தெய்வம்" என்பார் கண்ணதாசன். நாம் கண்ணதாசன் சொல்வதைப் புரிந்து கொண்டாயிற்று என் றால் தெய்வத்தைப் புரிந்து கொண்டாயிற்று என்று சொல்லலாம்!

'பூஜ்ஜியத்தினுள்ளே
ராஜ்ஜியத்தை
ஆண்டுகொண்டு
புரியாமலே இருப்பான்
ஒருவன்;
அவனைப் புரிந்துகொண்டால்,
அவன்தான் இறைவன்"

என்பார் கண்ண தாசன்.

பூஜ்யத்துக்கு என்ன கணக்கு? பூஜ்யத்துக்கு என்ன அளவு?

The concept of zero என்று சொல் கிறோமே அதைக் கணித ரீதியாக எடுத் துக்கொண்டு போனா லும் சரி, தத்துவ ரீதியாக எடுத்துக்கொண்டு போனா லும் சரி... அதன் எல்லை எது என்று சொல்ல முடியாது. அதற்கு முன்னால் ஓர் எண் போட்டால் ஒரு மதிப்பு, புள்ளி வைத் தால் ஒரு மதிப்பு; வைக்காவிட்டால் வேறொரு மதிப்பு. என்று எந்த இடத்தில் போய்ச் சேர்கிறதோ அதைப் பொருத்து அதன் மதிப்பு மாறுகிறது.

பூஜ்யத்தால் பெருக்கினால் பூஜ்யம் தான் என்று ஒரு விதி இருக்கிறது; வகுத் தால் என்ன வரும்...? எங்கே போய் நிற்கும் என்றால், எல்லையே இல்லாத தன்மையிலே போய் நிற்கும்.

அந்தப் பூஜ்யத்துக்குள்ளே ஒரு ராஜ் யத்தை ஆண்டுகொண்டு இருப்பது அறுதியிட்டுச் சொல்ல முடியாத ஒரு நிலை என்று அர்த்தம்!

பூஜ்யத்தையும் அதற்குள்ளே இருக்கிற ராஜ்யத்தையும் எப்படி நிர்ணயித்துச் சொல்ல முடியாதோ, அப்படித்தான் கடவுள் என்ற 'concept'ஐயும் வார்த்தை களால் நிர்ணயித்துச் சொல்ல முடியாது - அதை உணரத்தான் முடியுமே தவிர, புரிந்து கொள்ளத்தான் முடியுமே தவிர, விவரிக்க முடியாது.

'புரியாமலே இருப்பான்
ஒருவன்;
அவனைப் புரிந்து
கொண்டால் அவன்
தான் இறைவன்.'



## சூன்ய நகரம்!

ஆனால் அதே பூஜ்யத்தை இன்னொரு விதத்திலும் பார்க்க லாம். ஒன்றுமே இல்லை என்கிறபோது அது வெறும் சூன் யம். - பூஜ்யத்துக்கு 'nothing' என்றும் ஓர் அர்த்தம். ஒன்றுமே இல்லை - அதில் எந்த விதமான வஸ்துவும் கிடையாது. அப்படி சூன்யமாக இருக்கக் கூடிய ராஜ்யத்தை வைத் துக்கொண்டு பண் டாஸுரன் பெரிதாக ஆட்சி நடத்தினான் என்றால், ஒன்றுமே இல்லாததை இந்த ஜீவன்கள்

பெரிதாக எண்ணி, பிறவி ஸாகரத்தில் விழுகிறார்களே... அப்படி விழக் கூடியவர்களாக நாம் இருந்துவிடக் கூடாது என்பதற்காக ஏற்பட்ட கதைதான் பண்டாஸுரன் கதை! அதனால்தான் பண்டாஸுரனை லலிதாம்பிகை எப்படியெல்லாம் வதம் செய்கிறாள் என்கிற விவரங்கள் தரப்படுகின்றன.

பண்டாஸுரனை வதம் செய்ய வேண்டும் என்பதற்காக வந்த அவதாரம் அல்லள் லலிதாம்பிகை. ஒவ்வொரு ஜீவனும் நன்றாக வாழ வேண்டும் என்பதற்காக, பூமி வாழ்க்கையை வாழ்வதற்கு இந்த ஜீவனுக்கு வழி காட்டுவதற்காக வந்த அவதாரம், அவள்.

**ச**ரி, இந்த பண்டாஸுரன் கதையெல்லாம் நடந்ததே, அதோடு எல்லாம் முடிந்துவிடவில்லை. அறுபத்து நாலாவது திருநாமத்தில் ஆரம்பித்து, எண்பத்து மூன்றாவது திருநாமம் வரைக்கும் பண்டாஸுரன் கதையைச் சொல்லி அவனை அம்பிகை எப்படியெல்லாம் வதம் செய்தாள் - பாசுபதாஸ்திரத்தினால் வதம் செய்தாள்; அவனைச் சூன்யமாக்கினாள் - என்பதைத் தொடர்ந்து, அவனைச் சுற்றிலும் இருக்கக்கூடிய பிரம்மா, மஹேந்திராதி தேவர்கள் எல்லோருமாகச் சேர்ந்து அவளைத் துதிக்கிறார்கள். அப்படித் துதிக்கப்படுகிற வைபவமாக அவள் இருக்கிறாள்.

### மீண்டும் மன்மதன்!

**அ**வ்வாறு துதிக்கப்படுவதோடும் நின்றுவிடாமல் அதற்கப்புறம் ஒரு வரி வருகிறது:

*ஹர நேத்ராதி. ஸந்தக்த*
*காமசஞ்சீவன ஔஷதி*

ஹரனாக இருக்கக்கூடிய பரமேசுவரனின் நேத்திரம் (கண்). அந்த ஹரநேத்ராக்னி. அதாவது, சிவனுடைய நெற்றிக்கண்ணின் தீப்பொறி - அந்தத் தீப்பொறி பட்டு ஒருத்தன் (மன்மதன்) பஸ்மமாகிப் போனானே - அவனுக்கு ஔஷதமாக (மருந்தாக) இருக்கிறாள். *(காம சஞ்சீவன ஔஷதி!)*

'காமன் மறுபடியும் உயிர் பெறுகிற மாதிரி அவனுக்கு ஔஷதியாக இருக்கக் கூடியவளே!'' என்கிறது இந்தத் திருநாமம்.

மருந்தாக இருக்கிறாள் - அதுவும் சஞ்சீவினியாக - அவனுக்கு நிரந்தர வாழ்வைத் தரக்கூடிய ஔஷதமாக இருக்கக்கூடியவள் அம்பாள்.

காமன் எரிந்து சாம்பலானான். அந்தச் சாம்பலிலிருந்து பண்டாஸுரன் வந்தான். அவனும் அழிந்த பிறகு அந்தச் சுழற்சியை மீண்டும் காமனிடத்திலேயே கொண்டுபோய் நிறுத்தி, அவனுக்கு மருந்தாக இருக்கிறாள்



என்கிறபோது என்ன அர்த்தம்...?

அந்தக் காமன் ஏந்தியிருக்கும் அஸ்திரங்களையே தானும் ஏந்தியிருக்கிறாள் அம்பிகை. அதனால் அவனுக்கு உயிர் கிடைத்தது என்பது ஓர் அர்த்தம்.

ஆனால் இந்த இருவரும் ஒரே ஆயுதங்களை ஏந்துவதில் சூட்சுமமான வித்தியாசம் இருக்கிறது.

(தொடரும்)




விசிட்

மதுரை மாவட்டம் கீரிப்பட்டி, பாப்பாபட்டி, நாட்டாமங்கலம்- இந்தப் பெயர்கள் வரலாற்றில் பதிவாகிவிட்டன, தவறான காரணங்களுக்காக! இந்த ஊராட்சிகளும், விருதுநகர் கோட்டக்காச்சியனேந்தல் ஊராட்சியும் பலவித அடக்குமுறைகளையும் வென்று அட்டவணைப் பட்டியலில் உள்ளோரைத் தலைவராகக் கொண்டு இப்போது இயங்கி வருகின்றன. இந்த ஊர்களில் நடப்பது என்ன என்று அறிந்துகொள்ள ஒரு விசிட் அடித்தோம்.

முதலில் நாட்டாமங்கலத்துக்குள் நுழைந்தோம்... அங்கு சுமார் இரண்டாயிரம் வாக்காளர்கள். மூன்றில் ஒரு பங்கு அட்டவணைப் பட்டியல் இனத்தவர், இரு பங்கு தேவர் சமூகத்தவர். "ஐந்தாண்டுகளுக்குப் பின் 2001-ல் நடந்த தேர்தலில் யாருமே வேட்பு மனுத் தாக்கல் செய்யவில்லை. பின்பு இந்திய கம்யூனிஸ்ட் கட்சி அவ்வூர் மக்களிடையே ஒருங்கிணைப்பை ஏற்படுத்தி, தேர்தலின் பலன்களை விளக்கிய பிறகு, உள்ளாட்சித் தேர்தல் நடைபெற்று கணேசன் என்பவர் ஊராட்சி மன்றத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார்" என்றார் இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் உசிலம்பட்டி வட்டாரச் செயலாளர் நடராஜன்.


* முருகன்

"எங்கள் ஊரிலிருந்து இரண்டு கி.மீ. தூரம் நடந்து போய்த்தான் டவுன் பஸ் பிடிக்கணும். ஆனா, இப்போ உசிலம்பட்டியிலிருந்து செக்கானூரணிக்கு நாட்டாமங்கலம் வழியாக ரெண்டு டவுன் பஸ்கள் ஓடுது. சிமெண்ட் சாலைகள் போட்டிருக்கோம். இருபத்தைந்து தொகுப்பு வீடுகள் வேலை நடந்துக்கிட்டு இருக்கு. எங்களுக்கு மாவட்ட நிர்வாகம் முழு ஒத்துழைப்பு தருது!" என்று கூறினார் நாட்டாமங்கலம் ஊராட்சி மன்றத் தலைவர் கணேசன்.

# துப்பாக்கி முனை

"கடந்த ஐந்தாண்டுகளாகக் குடிநீர், சாலைகள் மற்றும் சுகாதார வசதிகள் எதுவும் புதிதாக எங்கள் ஊருக்கு வரவே இல்லை. இதனையெல்லாம் எங்கள் சமூகத்து மக்களிடம் எடுத்துக் கூறி, அவர்களை நல்லிணக்கத்துக்குக் கொண்டு வந்தோம்" என்



கிறார் தேவர் சமூகத்தைச் சேர்ந்த ஊராட்சி மன்றத் துணைத் தலைவர் முத்து ராமலிங்கம்.

பாப்பாபட்டி பஞ்சாயத்தில் சுமார் இரண்டாயிரத்து எழுநூற்றைம்பது வாக்காளர்கள். இதில் இரண்டாயிரம் பேர் தேவர் சமூகத்தவர். இங்கும் பத்தாண்டுகளாகத் தேர்தல் நடத்த முடியாத சூழ்நிலை தான். இப்போது தலைவராக இருப்பவர் பெரிய கருப்பன் எனும் விவசாயக் கூலி.

"எங்க ஊருக்கு மட்டும் கலெக்டர் ரெண்டு மூணு தடவை வந்து பேசிட்டுப் போனாரு. அதுக்கப்புறம்தான் ஊர்ல ஒரு ஒற்றுமையே ஏற்பட்டுச்சு. மத்திய அரசின் சிறப்பு நிதி பெற்று, இந்திரா நினைவுக் குடியிருப்பு வீடுகளின் கட்டடப் பணிகள் நடைபெற்று வருகின்றன. அதில் தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கும் தேவர் சமூகத்தவருக்கும் ஒதுக்கீடு செய்யப்பட்டுள்ளது. மாநில அரசின் சிறப்பு நிதி இருபத்தியொண்ணே முக்கால் லட்சம், தி.மு.க. கட்சி சார்பாகக் கொடுக்கப்பட்ட ஐந்து லட்ச ரூபாய் நிதியும் சேர்த்து அனைத்துக்குமான நலத்திட்டப் பணிகள் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன!" என்றார் பெரிய கருப்பன்.

"பாப்பாபட்டியில் கடந்த பத்தாண்டுகளாக அரசியல் கட்சிகள்தான் எங்களை ஆட்டிப் படைத்துக் கொண்டிருந்தன. மாவட்ட நிர்வாகம் இதில் நேரடியாகத் தலையிட்டு, தற்போது இங்கு மீண்டும் ஜனநாயகம் மலர்ந்துள்ளது" எனக் குறிப்பிட்டார் தேவர் சமூகத்தைச் சேர்ந்த பாப்பாபட்டி முதல் வார்டு உறுப்பினரான முருகன்.

கீரிப்பட்டியில் நாம் கண்ட காட்சி வேறு!

கீரிப்பட்டியில் மட்டும் எந்தக் கோயிலிலும் மகா சிவராத்திரி வழிபாடுகள் நடைபெறவில்லை. "ஒரு தாழ்த்தப்பட்டவன் எங்க ஊர்ல பிரசிடென்ட் ஆகி நீடிச்சு இருக்கறதால, இந்த அஞ்சு வருஷத்துக்கும் ஊருக்குள்ளார எந்தக் கோயில்லயும் திருவிழா நடத்துறது இல்லேன்னு முடிவு பண்ணிட்டோம்! அதனால கோயில் திருவிழா எதுவும் நடக்கல" என்று நம்மிடம் கூறினார் 'ஊர்ச் சாமி' ஒருவர்.

"கலெக்டர் ஆபீசுல எங்களுக்குத் தேவையான எல்லாத்தையும் உடனே செஞ்சு தர்றாங்க. முந்திபோல இல்லாம இப்போ ஏதோ சுமுகமாத்தாங்க போய்ட்டு இருக்கு!"

# ஜனநாயகம்!

என்றார் கீரிப்பட்டி ஊராட்சி மன்றத் தலைவர் பாலுச்சாமி.

ஆனால் தேவர் சமூகத்தவரோ, அட்டவணைப் பட்டியலினரோ ஊராட்சி மன்றத் தலைவராக செயல்பட்டு வருவதை, பிறமலைக் கள்ளர் வகுப்பைச் சார்ந்தவர்களில் தொண்ணூறு சதவிகிதம் நபர்கள் விரும்பவே இல்லை.

கீரிப்பட்டி, பாப்பாபட்டி, நாட்டாமங்கலம் ஆகிய கிராமங்களின் ஊராட்சி மன்றத் தலைவர்கள் ஒவ்வொருவருக்கும், துப்பாக்கி ஏந்திய காவலர் ஒருவர் இருபத்து நான்கு மணி நேரமும் பாதுகாப்புக்கென உடன் இருந்து வருகிறார்!

**கட்டுரைச் சித்திரம்: ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**


* முத்துராமலிங்கம்


* பாலுச்சாமி


* பெரிய கருப்பன்


* கணேசன்


* நடராஜன்



துராசு

● பி.சிவா, பாளையங்கோட்டை

? "ஜனாதிபதி பதவிக்கு அமிதாப் போட்டியிட்டால் அவரை தெலுங்கு தேசம் ஆதரிக்கும்" என்று சந்திரபாபு நாயுடு கூறுகிறாரே?

! ஜனாதிபதி பதவி ஏற்பதில் தமக்கு நாட்டம் இல்லை என்று அறிவித்த அமிதாப், நம் மதிப்பில் உயர்கிறார்; அவசரப்பட்டு ஆதரவு தெரிவித்த நாயுடு, நம் மதிப்பில் சற்றுத் தாழ்ந்து போகிறார்.

● லலிதா செல்லப்பா, சென்னை-75

? விஜயகாந்த்துடைய கல்யாண மண்டபத்தை இடிக்காமல் மேம்பாலம் கட்ட முடியாதா?

! முடியாது என்பது நீதிமன்றத்தாலேயே ஏற்கப்பட்டுவிட்டது; மாற்றுத் திட்டம் நிராகரிக்கப்பட்டது. இருந்தாலும், விஜயகாந்த் வீட்டுத் திருமணம் அண்மையில் அங்கு நடத்த திட்டமிருந்தால், அது முடியும் வரை இடிப்பதைத் தவிர்க்கலாம். கௌரவமாக இருக்கும் - இரு தரப்பினருக்கும்.

● ஏ.எஸ்.யோகானந்தம், கலிங்கியம்

? "எங்களிடம் தவறு இருந்தால், தோழமைக் கட்சிகள் அடித்துச் சொல்லாமல் இடித்துச் சொல்வது நாகரிகமாக இருக்கும்" என்று முதல்வர் கருணாநிதி கூறியிருக்கிறாரே!

! தமிழக அரசின் உற்பத்திக்கு உதவாத (திட்டத்துக்கு அப்பாற்பட்ட) செலவினங்கள் பற்றி புள்ளி விவரங்களுடன் எடுத்துச் சொல்லி, எச்சரித்திருக்கிறார் ராமதாஸ் (ஹிந்து நாளிதழ் 22.02.07). முதல்வர், இடித்துக் கூறப்படுவதைப் படித்துப் பார்த்தால் போதாது; மதித்து நடக்க வேண்டும். அப்படி நடக்காத போது அடித்துச் சொல்ல வைக்கிறாரே!



* அடியும் இடியும்!

# இடித்துச் சொல்வதே நாகரிகம் என்கிறாரே முதல்வர்?



* புச்சா கீது!

● எம்.சம்பத், வேலாயுதம்பாளையம்

? தர்மபுரி பஸ் எரிப்பு வழக்கில் வழங்கப்பட்டுள்ள தீர்ப்பில், மூன்று அ.தி.மு.க.வினர் குற்றவாளிகள் என முடிவாகி தண்டனை விதிக்கப்பட்டுள்ளதைத் தொடர்ந்து ஜெயலலிதா அரசியலிலிருந்து விலகுவாரா?

! சரியாப் போச்சு! இப்படிக் கேள்வி கேட்கறீங்கன்னு தெரிஞ்சு அவங்க தொண்டர்கள் இன்னும் இரண்டு பஸ்ஸை எரிக்காம இருக்கணும்!

● கே.கே.இராமச்சந்திரன்,
சென்னை - 11

? ஏழைகள் ரதம் எனப்படும் அதிவேக ரயிலுக்கு ஏழைகளின் ஆதரவு எப்படி...?

! ஏழைகளுக்காக ரயில் விடுவதைக் காட்டிலும் அவர்களது வாழ்க்கைத் தரம் உயர திட்டம் வகுப்பது நல்லது. புதிய ரயில்கள் விடுவதற்கு முன்னால், இருக்கிற ரயில்களிலும் ரயில் நிலையங்களிலும் சுத்தம் - சுகாதாரத்தை மேம்படுத்துவது நல்லது. புறநகர் ரயில்களின் சேவைத் திறனை அதிகரிப்பது நல்லது. ரயில்களின் எண்ணிக்கை அதிகரிக்க அதிகரிக்க, ஊழியர்களின் பணித்திறன் குறையும்.- இதைப் புரிந்துகொள்வது நல்லது.

● எம்.ஆர்.எஸ்.ராஜா, தேனூர்

? காவிரிப் பிரச்னை முழுமையாகத் தீர்ந்ததாகச் செய்தி கிடைக்காவிட்டாலும் அப்படியொரு செய்தி கிடைக்க வேண்டும் என்ற உணர்வோடு அதைத் தேடும் முயற்சியில் தாம் இருப்பதாக தமிழக முதல்வர் சொல்கிறாரே?

● ஆதரிக்க...



● எச்சரிக்கைக் குரல்!



● ...அவசரம்!

! இரு தரப்பினரும் மகிழ்ச்சியுடன் ஏற்கும்படியாகப் பிரச்னை தீர்வது சாத்தியமேயில்லை. பிரச்னைக்குரிய சூழலில் எவ்வாறு நீரைப் பகிர்ந்துகொள்வது என்பதை நடுநிலையாக நடுவர் மன்றம் கூறிய பிறகு, இரு மாநிலங்களும் மறுபடியும் 'அடியைப் பிடிடா' என்று பேச்சுவார்த்தை தொடங்குவது அபத்தம். குறிப்பிட்ட காலகட்டத்துக்குள் நடுவர் மன்றத்திடமே மேல் முறையீடு செய்வதும் அதன் இறுதித் தீர்ப்பை ஏற்பதும் இரு தரப்புகளுக்கும் விவேகம். சட்டமும் அதைத்தான் சொல்கிறது.

● என்.ரம்யா, பெங்களூர் - 40★

? இந்த வருடத்திலிருந்து விம்பிள்டனில் வெற்றி பெறும் ஆண் - பெண் வீரர்களுக்குச் சரிசமமாகப் பரிசுத் தொகை



• இறங்காத...



•... கொடி!

வழங்கப்போவது பற்றி...?

! ஆண்களுடன் ஒப்பிட, பெண்களின் முயற்சி எந்த விதத்திலும் குறைவானதல்ல என்கிறபோது, பரிசும் சமமாகத்தானே இருக்க வேண்டும். நல்ல முடிவு.

• வீ. உதயகுமரன், வீரன்வயல்

? ஒரு காலத்தில் கொடி கட்டிப் பறந்த கே.பாலசந்தர், விஜய டி.ஆர் போன்றவர்களின் தற்போதைய படங்கள் விரைவிலேயே பெட்டிக்குள் போவது ஏன்...?

! காலையில் ஏற்றப்பட்ட கொடி மாலையில் இறக்கப்பட வேண்டும். அதுதான் கொடிக்கு மரியாதை. நாமே இறக்காமலிருந்தால் மக்கள் இறக்கி விடுவார்கள். இது உலக நியதி.

• வீ.பெரியசாமி, தேளூர் ❑

? தொழிற்சாலைகளுக்காக நிலம் விற்றால் உணவு இறக்குமதி செய்ய வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படும் என்கிறாரே எம்.எஸ்.சுவாமிநாதன்?

! செல்போன்களும் B.P.O.க்களும் மோட்டார் கார்களும் மெய்யான தொழில் வளர்ச்சி அல்ல; விவசாயமும் அதைச் சார்ந்த தொழில்களும்தான் பொருளாதார வளர்ச்சியின் அஸ்திவாரம் என்பது உணரப்படும்போது நிலைமை சரியாகும். இதற்கு அரசியல்வாதிகளை மட்டும் நம்பாமல், சுவாமிநாதன் போல இதர விஞ்ஞானிகளும் உரக்கக் குரல் கொடுக்க வேண்டும்.

• வசீகரன், தேனாம்பேட்டை

? "சென்னைத் தமிழில் இலக்கியம் படைப்பேன்'' என்கிறாரே ஜெயகாந்தன்?

! அவர் சும்மா பூந்து விளையாடி கீட மாட்டாரா? ஜனம் மொத்தம் வுய்ந்து வுய்ந்து படிக்கக் காத்துக்கினு கெடக்குது.

• ஆர். ரங்கநாதன், சென்னை - 17

? சங்கமம் கலைவிழா எப்படி...?

! சர்ச்சைகளின் சங்கமமும்கூட!

• அ.சுஹைல் ரஹ்மான், திருச்சி - 21

? 'திண்டிவனம் பஸ் நிலையப் பணிக்காக ஜெ. ஆட்சிக் காலத்தில்தான் ஏரிப்பகுதி கையகப்படுத்தப்பட்டது' என்று மு.க.ஸ்டாலின் அறிக்கை வெளியிட்டுள்ளாரே?

! இது போன்ற பரஸ்பரக் குற்றச்சாட்டுகளால் அலுத்துச் சலித்துப் போயிருக்கிறார்கள் மக்கள். நேர்மையான, நல்ல முடிவுகளை எடுத்து, செயல்படுத்தி, நிர்வாகம் சிறக்க, மாநிலம் முன்னேற - உருப்படியான விவாதங்கள், யோசனைகளுக்காக ஏங்குகிறார்கள்.

• மல்லிகா அன்பழகன், சென்னை - 112

? நடிகை ப்ரீதா வர்மாவின் படத்துக்கு அவரது தாயார் தினமும் மாலை போட்டு அஞ்சலி செய்வது பற்றி...?

! மீடியாவுக்குக் கிடைத்த அவல்!

• நீ. முத்துக்குமார், திருச்சி - 2

? சினிமா பணத்துக்காக எடுக்கப்படுவதா? மக்களுக்காக எடுக்கப்படுவதா...?

! மக்களின் பணத்துக்காக. (மிக அபூர்வமாக விதிவிலக்குகள் உண்டு)

★ ரூ.50/- பரிசு பெறுபவர்

என். ரம்யா,
S1, சுவாகத் விநாயகா மேன்ஷன்,
41, முதல் முக்கிய விநாயகா
மூன்றாம் ஸ்டேஜ்,
விஜய் நகர்,
பெங்களூர் - 560 040

❑ ரூ.100/- பரிசு பெறுபவர்

வீ.பெரியசாமி,
தேளூர்,
அரியலூர் தாலுகா





டாக்டர். எல்.மஹாதேவன்

# விடை கொடுக்கும் பருவம்!

**நா**ற்பது, ஐம்பது வயதில் ஒரு பெண்ணுக்கு ஏற்படக் கூடிய உடல் / மன மாற்றங்கள் எதுவாயினும் அதை மெனோபாஸால் வருகின்ற விளைவு என்று முத்திரை குத்துவது சுலபம். ஆனால் அவ்வாறு செய்வது சரியல்ல!

**மெனோபாஸ் - ஏன்? எப்படி?**

மாதந்தோறும் சரியான இடைவெளியில் வருகின்ற மாதவிடாய் நின்று போகும் நிகழ்வே மெனோபாஸ். ஏற்படும்.

சில பெண்களுக்கு மரபணுக்கள் காரணமாகவும், நோய் எதிர்ப்புச் சக்திக் குறைவினாலும் மாதவிடாய் நாற்பது வயதுக்கு முன்பே நின்று விடும். சிலருக்கு அறுவை சிகிச்சையின் மூலம் கர்ப்பப் பையையும் சினைப் பைகளையும் நீக்குவதாலும் செயற்கையாக மெனோபாஸ் ஏற்படும்.

**அறிகுறிகள்:**

மாதவிடாய் முற்றிலுமாக நிற்பதற்கு முன்பே ஒழுங்கான, சீரான கால இடைவெளியில் வராமல் முறையற்று வரும். இரத்தப்போக்கு ஒரே ஒரு நாள் மட்டும்

ஆயுர்வேதம் இதனை இயற்கையான நிகழ்வாகவே குறிப்பிடுகிறது. அதாவது, ஐம்பது வயதுக்குப் பிறகு உடலில் பித்தத் தன்மை அதிகரிக்கும்; சினை முட்டைகளின் செயல்பாடுகளும் குறைந்துவிடும். நாற்பத்தைந்து வயது முதல் ஐம்பது வயதுக்குள் மெனோபாஸ் ஆரம்பிக்கும்.

வயது ஏற ஏற, அண்டத்தின் (ஓவரீஸ்) செயல்பாடுகள் குறைவதால் ஈஸ்ட்ரோஜன் மற்றும் புரோஜஸ்டிரோன் உற்பத்தி குறையலாம். அதன் விளைவாக, சினை முட்டை உற்பத்தியும் குறையும். அதனால் ஹார்மோன் பற்றாக்குறை



இருக்கும் அல்லது நீண்ட நாட்கள் தொடர்ந்து இருக்கும்; இரத்தப் போக்கு அதிகமாகவும் இருக்கும். ஒரு சில மாதங்களுக்கு முறையாக வரும், பின்பு வரும் மாதங்களில் முறையற்று இருக்கும். இந்தச் சமயத்தில் hot flashes என்கிற உஷ்ணமான உணர்வுகள் உடலில் – குறிப்பாக, கழுத்து, பின்தலைப் பகுதிகளில் ஏற்படும். ஒரு வருடம் முதல் ஐந்து வருடங்கள் கூட இந்த நிலை தொடரும். இதற்கு ஹார்மோன் உற்பத்தியில் காணப்படும் ஏற்றத் தாழ்வுகளே முக்கிய காரணம். இரத்த நாளங்கள் விரிவடைவதால்தான் இப்படி ஏற்படுகிறது.

மெனோபாஸ் பருவத்தில் உள்ளவர்களுக்கு இது போன்ற அனல் வீச்சுடன் அதிகமான வியர்வையும் ஏற்படும். இது முப்பது விநாடிகள் முதல் ஐந்து நிமிடங்கள் வரை நீடிக்கலாம். அதன் பின்பு உடல் குளிர்ந்து விடும். மேலும் மன அழுத்தம், சோகம், சுய இரக்கம், மனப் பரபரப்பு, எரிச்சல், உறக்கமின்மை, கவனச்சிதறல், தலைவலி, மந்தத் தன்மை, அசதி போன்றவை காணப்படும். இவை அனைத்தும் ஈஸ்ட்ரோஜன் குறைவதால் ஏற்படுகின்றன.

மேலே சொன்ன அறிகுறிகளோடு இரவு நேரங்களில் அதிகமாக வியர்க்கும்; அதனால் உறக்கம் வராது. சில சமயங்களில் தலைசுற்றுவது போன்ற உணர்வு ஏற்படும். கை, கால் மரத்துப் போகும். இருதயப் படபடப்பு காணப்படும். உடல் எடை அதிகரிக்கும்.



**முப்பது, முப்பதைந்து வயதுக்குப் பின்பு கால்ஷியத்தை மாத்திரை வடிவில் சேர்த்துக்கொள்ள வேண்டும்**

ஈஸ்ட்ரோஜன் குறைவினால் பெண்ணுறுப்பில் வறட்சித் தன்மை ஏற்படும். இதனால் பாலியல் உறவின்போது வலி ஏற்படும். தாம்பத்யத்தில் நாட்டம் குறையும். சிறுநீர் கழிக்கும் போது எரிச்சல் உண்டாகும். சிறுநீர்த் தொற்று உண்டாகும். சிலருக்கு இருமும் போதும் தும்மும் போதும் மூத்திரப்பையிலிருந்து சிறுநீர் வெளியேறும்.

இந்த அறிகுறிகள் எல்லாமே எல்லோருக்குமே ஏற்படும் என்று எண்ணி அஞ்சுவது அவசியமற்றது. அறிகுறிகளும் அவற்றின் தீவிரமும் நபருக்கு நபர் வேறுபடும்.

**ஆஸ்டியோபோரோஸிஸ்:**

ஈஸ்ட்ரோஜன் குறைவினால் எலும்பின் கனத்தன்மை குறையும். இதனை 'ஆஸ்டியோபோரோஸிஸ்' என்கிறோம். ஆயுர்வேதம் இதை 'அஸ்திக்ஷயம்' என்கிறது. எலும்புகளின் கனம் குறைவதால் எலும்பு முறிய வாய்ப்புகள் அதிகம். மாதவிடாய் நின்ற பிறகு உடலில் கொழுப்பு படிமானம் அதிகமாவதால் இருதய நோய்கள்

உண்டாகக் கூடிய வாய்ப்புகளும் உள்ளன.

எலும்புகளின் உறுதிக்கும் கனத்துக்கும் காரணமாக அமைவது கால்சியம், பாஸ்பரஸ் போன்ற தாதுக்கள். கால்சியத்தை எலும்பு ஏற்றுக்கொள்வதற்கு 'வைட்டமின் டி' தேவைப்படுகிறது. 'வைட்டமின் டி' சூரிய ஒளியில்தான் அதிக அளவில் கிடைக்கிறது. சிறு வயதில் எலும்புகள் அகலமாகவும், நீளமாகவும் வளர்கின்றன. வயது ஏற ஏற, அகல வாட்டில் வளர்ச்சி இருக்கும். நீளவாட்டு வளர்ச்சி நின்றுவிடும். முப்பது வயது வரை எலும்பின் கனத்தன்மை அதிகரிக்கும்; எலும்புகள் சக்திவாய்ந்தவையாகக் காணப்படும். எலும்புகளின் கனம் குறைவுக்கு சிறுநீரகப் பாதிப்பு, ஹார்மோன்களின் குறைபாடு, பாராதைராய்டு பிரச்னை, தைராய்டு அதிகமாகச் சுரப்பது சர்க்கரை நோய், போன்றவையும் மிக முக்கிய காரணிகள் ஆகும். சிகரெட், மது அருந்துவது போன்றவையும் முக்கிய காரணிகள். ஆண்களுக்குக் கூட எலும்பின் கனத் தன்மை குறைபாடு சிகரெட், மதுவினால் வரலாம்.

பெண்களுக்கு மெனோபாஸ் பருவத்தில் இந்த எலும்புத் தேய்மானம் விரைந்து ஏற்பட வாய்ப்பு இருக்கிறது. இதற்கு முக்கியமான காரணம் ஈஸ்ட்ரோஜன் ஹார்மோன் சுரப்பு நின்று போவது அல்லது வெகுவாகக் குறைந்து போவதுதான். சூரிய ஒளியைப் போலவே, கால்ஷியம் சத்தை உடல் உறிஞ்சி ஏற்க உதவுவது ஈஸ்ட்ரோஜன்.

ஆஸ்டியோபோரோஸிஸை முழுவதுமாகக் குணப்படுத்த இயலாது. மருத்துவ உதவியுடன் கட்டுப்பாட்டுக்குள் வைக்கலாம். ஆஸ்டியோபோரோஸிஸ் ஏற்பட்டால் எலும்புகள் சீக்கிரத்தில் உடைந்து போகிற வாய்ப்பு மிக அதிகம். வலியும் இருக்கும். எலும்புகளில் கால்ஷியத்தின் அளவை அதிகரிக்க இயற்கையாக நாம் உட்கொள்ளும் உணவுகள் கை கொடுக்காது. இக் குறைபாடு வராமலிருக்க, முப்பது, முப்பத்தைந்து வயதுக்குப் பின்பு கால்ஷியத்தை மாத்திரை வடிவில், டாக்டரின் ஆலோசனை பெற்றுச் சேர்த்துக் கொள்ள வேண்டும். எலும்புத் தேய்மானம் பெரும்பாலான பெண்களுக்குப் பெரும் பிரச்னையாக இருப்பதால் குறிப்பிட்ட கால இடைவெளியில் உடலைப் பரிசோதித்துக் கொள்வது முக்கியமான முன்னெச்சரிக்கை நடவடிக்கையாகும்.

ஆயுர்வேதத்தில், எலும்புகளைக் கனப்படுத்தும் லாக்ஷாதி தைலம், குக்குலு திக்தகம், நெய், எள்ளினால் செய்யப்பட்ட கந்த தைலம், முட்டைத்தோடு பஸ்மம், தன்வந்தரம் எண்ணெய் போன்றவை முக்கிய மருந்துகள். தன்வந்தர எண்ணெயினால் மலசுத்தி (எனிமா) செய்வது சிறந்த சிகிச்சை. தினமும் இரண்டு அல்லது மூன்று எள்ளுருண்டைகளை சாப்பிட்டுக் குளிர்ந்த நீரை அருந்த வேண்டும்.

சதாவரி லேகியம், திராக்ஷாதி கஷாயம், மஹாதிக்தகம் கிருதம், க்ஷீரபாலா எண்ணெய் கொண்டு 'நஸ்யம்' (மூக்கு வழி விடுவது) செய்தல், தலைக்குத் தளம் வைப்பது, எண்ணெய் வைப்பது போன்றவை நல்ல பலனைத் தருகின்றன.

மன எரிச்சலைக் கட்டுப்படுத்த சங்கு புஷ்பி சூரணம், மானஸமித்ரம், பஞ்சாரவிந்த ரஸாயனம் போன்றவை நல்ல நிவாரணிகள். ஸஹசராதி தைலம், தன்வந்தரத் தைலம் போன்றவற்றைத் தேய்த்துக் குளிப்பது எலும்புகளுக்கு நல்லது. இரவு உறங்கச் செல்லும்முன் ஒரு ஸ்பூன் கந்த தைலத்தையோ தன்வந்தர தைலத்தையோ சேர்த்துக் குடிப்பது, மாதவிடாய் நின்ற பிறகு ஏற்படும் எலும்பு கனத்தன்மைக் குறைவுக்கு நல்ல பலன் அளிக்கும். இதோடு பிரண்டை சூரணமும் நல்ல மருந்து.

(தொடரும்)

• எள்ளுருண்டை





# மனங்கவரும் மாடுலர்

பளபளப்பான ஃபினிஷிங்குடன் குட்டியாக, நடுத்தரமாக, பெரியதாக கண்ணைக் கவர்கின்றன அந்த ரெடிமேட் பூஜையறைகள். 'வீட்டில் பூஜையறை என்று தனியே இல்லையே' என்று வருந்துவோரின் கவலை நீக்க வந்துள்ளது 'டிவைன் ஹோம்' ரெடிமேட் மாடுலர் பூஜையறைகள்.

'டைனிங் டேபிள் போல, சோபா செட் போல பூஜையறையும் ரெடிமேடாகக் கிடைக்கிறதா?' என்று நாம் ஆச்சரியத்துடன் கேட்டதற்கு...

விசந்திரா எண்டர்பிரைசஸ் உரிமையாளர் வி.சந்திரசேகரன் பதறாமல், சிதறாமல் பதிலளித்தார்.

"ஃப்ளாட்டில் வசிப்போருக்கும், சிறிய வீடுகளில் இருப்பவர்களுக்கும் தனியாகப் பூஜையறை இல்லையே என்ற ஏக்கமிருக்கும். அவர்களின் கனவை நனவாக்க நாங்கள் அறிமுகப்படுத்தியதே இந்த 'டிவைன் ஹோம்.'

மலேஷியாவிலிருந்து 2003-ல் இறக்குமதி செய்யப்பட்டு, இந்தியாவிலேயே முதன் முறையாக நாங்கள் அறிமுகப்படுத்திய பூஜா மாடங்கள், தற்போது பெரிய அளவில் வரவேற்பைப் பெற்றுள்ளன. பல்வேறு அளவுகளில் அவரவர் பொருளாதார வசதிக்கேற்ப ஐயாயிரத்திலிருந்து ஐம்பதாயிரம் வரை எங்களிடம் மாடுலர் பூஜா மாடங்கள் விற்பனைக்குக் கிடைக்கின்றன. அவரவர் விரும்புகிற வகையில் இஷ்ட தெய்வங்களையும், சின்னங்களையும் பொறித்தும் மாடுலர் பூஜையறைகளை ரெடி செய்து தருகிறோம்.

தனியாக மாடுலர் பூஜையறை செய்வதற்கு ஒரு தச்சரை ஏற்பாடு செய்து பார்த்த அநேகர், அதற்கான கால விரயத்தையும், செலவையும் ஒப்பிட்டுப் பார்த்து, எங்களது தயாரிப்புகள் சற்று



• சந்திரசேகரன்



"அன்பளிப்பு கொடுத்து அசத்துவதற்கு இது சரியான விஷயம்!"

# பூஜையறைகள்!



விலை கூடுதலாக இருந்தாலும் மிகுந்த திருப்தி தருகின்றன என்று மன நிறைவோடு கூறுகிறார்கள்."

மஹோகனி, ரோஸ்வுட், சாண்டல் வுட் ஆகிய மூன்று வண்ணங்களில் இந்தக் கலைப் பொருட்கள் கிடைக்கின்றன. கேரளத்தில் கதவில்லாத மாடல்களுக்கும், தமிழகத்தில் கதவுள்ள மாடல்களுக்கும் அதிக வரவேற்புள்ளது. ஐயப்ப பக்தர்களுக்கென பதினெட்டுப்படி வைத்த மாடங்களையும் நாங்கள் சிறப்பாகச் செய்து தந்துள்ளோம்.

தங்கமுலாமிட்ட தத்ரூப தெய்வ உருவங்கள், தாமிரத்தில் செய்யப்பட்ட மணிகள், தெய்வ உருவங்கள் பதியுமிடத்தில் எண்ணெய் போன்ற கறைகள் படியாததற்கான செராமிக் ஓடுகள் என ஒரு குட்டிக் கோயிலையே வாடிக்கையாளர்களுக்குத் தருவதில் பெருமை கொள்கிறோம். அதோடு மட்டுமின்றி கல்யாணம், கிரஹப் பிரவேசம் போன்ற நிகழ்வுகளில் உங்கள் நெருங்கியவர்களின் மனதில் இடம் பெற எங்கள் பூஜை மாடங்களை அன்பளிப்பாகக் கொடுத்து மகிழ்விக்கலாம்" என்று கூறுகிறார் சந்திரசேகரன்.

தொடர்புக்கு :
2464 1403, 2461 4957
website:www.vichandra.com

சந்திப்பு: **ஆதித்யா**
படங்கள்:
**பொள்ளாச்சி சுந்தரம்**



டியர் கல்கி வாசகாஸ்...

பிடியுங்க
உங்க புத்தாண்டு
பரிசை!

விதவிதமான
போட்டிகள்...
வித்தியாசமான
பரிசுகள்...!
கனவோடு
காத்திருங்க...
வந்துக்கிட்டே
இருக்கோம்!

அடேங்கப்பா,
ஒரு லட்சமாமே...!



# கல்கி

குடும்பத்துடன் படிக்க...



11.3.2007

இதழுடன் இணைப்பு... 16 பக்கங்கள்

+16

# ஜெயிக்கப் போவது நீங்க!





அரசு மற்றும் அரசுத்துறை சார்ந்த நிறுவனங்களில் காலியான பணி இடங்களை நிரப்புவதற்குப் பத்திரிகைகளில் விளம்பரம் வெளியிட்டு, போட்டித் தேர்வு நடத்துவதுதான் வழக்கம். அத்தகைய தேர்வுகளுக்கு விண்ணப்பம் அனுப்பும்போது மிகவும் கவனமாக இருக்க வேண்டும். அதில் சிறு தவறு செய்துவிட்டால்கூட, உங்கள் விண்ணப்பம் நிராகரிக்கப்பட்டுவிடும். விண்ணப்பத்தைப் பூர்த்தி செய்ய பொதுவான சில டிப்ஸ் :



# நில்... கவனி...



● செய்தித்தாளில் வரும் வேலைக்கான விளம்பரத்தை அப்படியே கத்தரித்து, அதில் கொடுத்துள்ளபடி, விண்ணப்பத்தைத் தயார் செய்து கொள்ளுங்கள்; அல்லது, ரெடிமேடாகவே கிடைத்தால் வாங்கிக் கொள்ளலாம். வாங்கும் அப்ளிகேஷனும், செய்தித்தாளில் கொடுக்கப்பட்டுள்ள மாதிரியும் ஒன்றாக இருக்கின்றனவா என்று ஒருமுறை சரி பார்த்துக்கொள்ளுங்கள்.

● அப்ளிகேஷனைப் பூர்த்தி செய்யத் தொடங்கும் முன்பு, தரப்பட்டுள்ள இன்ஸ்ட்ரக்ஷன்கள் அனைத்தையும் கவனமாகப் படியுங்கள். அவற்றில் முக்கியமானவற்றை அடிக்கோடிட்டு வைத்துக் கொள்ளுங்கள்.

● நேரடியாகப் ஃபார்மை பூர்த்தி செய்ய ஆரம்பிக்காமல், அப்ளிகேஷனை ஒரு நகல் எடுத்து முதலில் அதை மாதிரியாக பூர்த்தி செய்யுங்கள்.

● சில விண்ணங்களை கறுப்பு இங்கில் தான் பூர்த்தி செய்ய வேண்டும் என்று சொல்லி இருப்பார்கள்; பெரும்பாலானவர்கள் பால் பாயிண்ட் பேனாவால் பூர்த்தி செய்ய வேண்டும் என்று குறிப்பிட்டிருப்பார்கள். எந்த மாதிரி குறிப்பிடப்பட்




டுள்ளதோ அதை பின்பற்றுங்கள்.

• தேர்வு மையம், இட ஒதுக்கீடு, தாய் மொழி போன்ற விவரங்களை எழுத்தில் எழுதுவதுடன், அவற்றுக்குரிய குறியீட்டையும் குறிப்பிட வேண்டி இருக்கும். கவனமாக இருக்கவும்.

• டெலிஃபோன் எண், தபால் குறியீட்டு எண் போன்றவற்றை அவற்றுக்குரிய கட்டங்களில் தெளிவாக எழுதவும்.

• விண்ணப்பத்தில் புகைப்படத்தை ஒட்டச் சொல்லி இருந்தால், அது எந்த அளவு நீள, அகலத்தில் இருக்க வேண்டும், கறுப்பு வெள்ளையா, கலரா? எப்படி குறிப்பிடப்படுள்ளதோ, அந்த அளவுள்ள புகைப்படங்களையே ஒட்டவும்.

• சில விண்ணப்பங்களில் பெருவிரல் அடையாளம் பதிக்க வேண்டிருக்கும். அப்போது எந்த விரலின் ரேகையைப் பதிவு செய்ய வேண்டும் என்று கவனமாகப் படித்து அதன்படி செய்யவும்.

இணைத்து அனுப்பப்பட வேண்டும் என்று கோரப்பட்டுள்ளதோ, அவற்றை மறக்காமல் இணைத்து அனுப்பவும்.

• பூர்த்தி செய்யும்போது, சில விவரங்களை உடனடியாகப் பூர்த்தி செய்ய முடியாமல் இருக்கலாம். அப்படிப்பட்ட விவரங்களைத் தனியாக ஒரு தாளில் பட்டியலிட்டு வைக்கவும். அவற்றை மறக்காமல் செய்து முடித்து, பட்டியலில் அவற்றுக்கு எதிரில் 'டிக்' செய்து விடவும்.

• விண்ணப்பத்தை சாதாரணத் தபால், பதிவுத் தபால், கூரியர் இவற்றில் எதன் மூலமாக அனுப்பும்படி குறிப்பிடப்பட்டுள்ளதோ அப்படி அனுப்பவும்.

• அனுப்புவதற்கு முன்னால், பூர்த்தி செய்யப்பட்ட விண்ணப்பத்தையும், இதர இணைப்புகளையும் ஒரு செட் ஜெராக்ஸ் எடுத்து, உங்களிடம் வைத்துக் கொள்வது நல்லது.

# அனுப்பு!



• விண்ணப்பத்தின் ஜெராக்ஸ் பிரதியைப் பூர்த்தி செய்த பிறகு, ஒரு முறைக்கு இருமுறை கவனத்துடன் படித்துப் பார்த்துவிட்டு, அதன் பிறகு ஒரிஜினல் அப்ளிகேஷன் ஃபார்மைப் பூர்த்தி செய்யவும்.

• அப்ளிகேஷனில் குறிப்பிடப்பட்டுள்ள சில தகவல்களை, கெசட்டட் அதிகாரியிடமிருந்து உண்மை நகல் என்று சான்றிதழ் (அட்டெஸ்டேஷன்) பெற்று அனுப்ப வேண்டியிருந்தால், அதன்படி செய்யவும்.

• அப்ளிகேஷனுடன் என்னென்ன

• விண்ணப்பங்கள் சம்பந்தப்பட்டவர்களுக்கு வந்து சேரக் கடைசிநாள்வரை காத்துக் கொண்டிருக்காமல், கவனத்துடன் பூர்த்தி செய்து, எவ்வளவு சீக்கிரம் அனுப்பி வைக்க முடியுமோ, அவ்வளவு சீக்கிரம் அனுப்பி வைக்கவும்.





# சென்று வா,

''வீட்ல யாரும் இல்லையா?''

''அடடா, வாங்க. அம்மா, கோபால் மாமா வந்திருக்கார். உட்காருங்க மாமா''

''என்னடா மகேஷ், வாசல் கதவைத் திறந்து போட்டுட்டு எல்லோரும் ரூமுக்குள்ளே என்ன செய்யறீங்க?''

''அதுவா... இன்னிக்கு இன்டர்வியூக்குப் போறேன். அதான்.''

''நீ என்னடா தெலுங்கு சினிமா ஹீரோ மாதிரி கட்டம் போட்ட கலர் சட்டை, கூலிங் கிளாஸ்னு கலக்கறே?''

"அப்பாதான் அட்ராக்ஷனா இருக்கும்னு போட்டுக்கச் சொன்னார். நல்லா இருக்கா?''

''கிழிஞ்சது கிருஷ்ணகிரி. நீ முன்ன பின்ன ஏதாவது இன்டர்வியூக்குப் போய் இருக்கியா? இப்படியா அனுப்பறது?''

"நல்லா சொன்னீங்க, மாமா, இவங்க ஆளாளுக்கு ஒண்ணைச் சொல்லி என் வயித்தைக் கலக்கறாங்க. நீங்க பெரிய கம்பெனியில ஒர்க் பண்றவர். அனுபவமிருக்கும். இன்டர்வியூக்கு எப்படி போகணும்னு சொல்லுங்களேன்!''

"அவ்வளவுதானே! இன்டர்வியூக்கு டிரஸ் கோட் (dress code) ரொம்ப முக்கியமான விஷயம். இது கல்யாணத்துக்கோ, பிக்னிக்குக்கோ போற விஷயமில்லை. பார்த்த முதல் பார்வையிலயே நம்ம மேல மதிப்பு வரணும். டார்க் கலர் பேண்ட் ஒயிட் அல்லது வேற லைட் கலர் சர்ட் போடறது நல்லது. அரைக்கை சர்ட்டை விட முழுக்கை சர்ட்தான் பெஸ்ட்.''

''பாட்டி தலைமுடியை இப்படிப் படிய வாரி விட்டுட்டாங்க. பார்க்கறதுக்கு பரிதாபமான தோற்றத்தைக் கொடுக்குது. எனக்கு துளிக் கூட பிடிக்கல. கேஷுவல் ஹேர் ஸ்டைலில் ஓ.கே.தானே மாமா?''

''வேண்டாம் மகேஷ். கண்ணியமானத் தோற்றம் தேவை. நீளமான முடி, கிருதா இருந்தா முதல்ல கத்தரி போடறதுதான் சரி. தாடியும் கூடாது. அதுதான் முகத்துக்கு அழகுன்னா நல்லா ட்ரிம் செய்துக்கணும். காதில் கடுக்கன், விரல்களில் வரிசையா மோதிரங்கள், வெளியில் தெரிகிற மாதிரி உடலில் பச்சைக் குத்தல்கள் இதெல்லாம் கூடவே கூடாது.''

"ஓகே மாமா, இந்த 'டை' கஷ்டமா இருக்கு. கழட்டிடலாமா?''

''ஒண்ணு தெரிஞ்சுக்க மகேஷ், நாம போடற ஆடை முதல்ல நமக்கே சௌகர்யமா




இருக்கான்னு பார்க்கணும். சில கம்பெனிகள் தவிர மற்றவை 'டை'யை அவ்வளவு கட்டாயமா எதிர்பார்க்கறதில்லை. ஆனா கண்டிப்பா 'ஷூஸ்', ஸாக்ஸ் மஸ்ட். டார்க் கலரா இருந்தா ரொம்ப ஸ்மார்ட்டா இருக்கும். அதென்ன சட்டைப் பாக்கெட்ல..."

"சாமி படம், எனக்குத் தெரிந்த சில வி.ஐ.பி.க்களோட விசிட்டிங் கார்டு, அப்புறம்..."

"முதல்ல அதையெல்லாம் தூக்கு. சட்டைப் பாக்கெட்டை ஃபைலாக்காதே. கூடிய வரைக்கும் காலியா வெச்சுக்க. அவசியம்னா டாக்யுமெண்ட்ஸ் ஃபோல்டர்ல வெச்சுக்க. அதேபோல நிறைய சில்லரைகள், சாவிக் கொத்து இருந்தா எடுத்துடு. நடக்கறப்ப கொலுசு மாதிரி சத்தம் வரக் கூடாது."

"பெர்ஃபூம் போட்டுக் கலாமா?"

"போட்டுக்கலாம். நறுமணம் மென்மையா இருக்கட்டும். சூயிங்கம், சிகரெட் வாசனை எல்லாம் கூடவே கூடாது."

"தேங்க்ஸ் மாமா! நல்ல நேரத்துல வந்தீங்க. அப்படியே இன்டர்வியூவுல ஜெயிச்சு வெற்றியோடு திரும்பறதுக்கு ஆசீர்வாதம் செய்ங்க."

"ஆல் த பெஸ்ட் மகேஷ்."





# வென்று வா!




பெண்கள் புடைவை, சல்வார் அணியறது பெஸ்ட். ஆண்கள் மாதிரி சட்டை, பேண்ட்ஸ் போட்டு பழக்கமாகி இருந்தா அதே உடையில் போகலாம். எந்த உடையாக இருந்தாலும் அதுல கண்ணியம் இருக்கட்டும். வண்ணங்களை வாரி இரைச்ச மாதிரி இருக்கக் கூடாது. ப்ளெய்னா இருந்தாலே போதும். அளவான ஹீல்ஸ் கொண்ட காலணிகள் அணியலாம். ஆனா அது 'டக் டக்'ன்னு ஓசையை எழுப்பாத மாதிரி இருக்கட்டும். லைட் மேக்-கப் போட்டுக்கலாம். காதணிகள் சின்னதா இருக்கட்டும். ஸ்டைலான ஹேண்ட் ஃபேக்கைக் கூடத் தவிர்க்கலாம். ஸிம்பிள் அண்ட் ஸ்மார்ட் பாலிஸிதான் பெஸ்ட்.







**வேலைக்காக இன்டர்வியூவுக்குப் போகிறீர்களா? வெற்றி பெற வாழ்த்துகள். ஒரு வேளை உங்களால் வெற்றி பெற முடியவில்லையா? மனம் தளர வேண்டாம்; தன்னம்பிக்கை இழக்க வேண்டாம். சென்னை ஸ்ரீ ராமகிருஷ்ணா மிஷன் ஆஸ்ரமத்தின் சுவாமி போதமயானந்தாவின் ஊக்கமூட்டும் வார்த்தைகளைப் படியுங்கள். மனச்சோர்வு அகலும்; தன்னம்பிக்கையும், புத்துணர்ச்சியும் பெருகும்.**

# வெற்றிக்கொடி

### எறும்பைப் பார்!

**வே**லை தேடும் இளைஞர்களே! எறும்புகளைப் பாருங்கள். அவற்றிடமிருந்து விடாமுயற்சியைக் கற்றுக் கொள்ளுங்கள். ஓர் எறும்பு ஊர்ந்து சென்று கொண்டிருக்கிறது. அதன் வழியில் ஒரு சிறு கட்டை இருக்கிறது. அந்த சின்னஞ்



சிறு எறும்பு, 'வழியில் ஏதோ ஒரு தடை உள்ளதே' என்று மனம் ஒடிந்து வந்த வழியே திரும்பிச் சென்று விடுவதில்லை. அந்தக் கட்டையின் மேலே ஏறிக் கடந்து செல்ல முடியுமா என்று பார்க்கிறது. முடியாத பட்சத்தில் கட்டைக்குக் கீழே ஏதாவது வழி தென்படுகிறதா என்று பார்க்கிறது. வழி தென்பட்டால், கட்டைக்குக் கீழே புகுந்து, அந்தப் பக்கத்தை அடைந்து, தன்னுடைய பயணத்தைத் தொடருகிறது. அதுவும் இல்லை என்றால், கட்டையை ஒட்டியே வலப் புறமோ, இடப் புறமோ திரும்பி, நகர ஆரம்பிக்கிறது. "ஐயோ! இது சுற்று வழி ஆயிற்றே!" என்று மனம் தளர்ந்து உட்கார்ந்து விடுவதில்லை. அந்த எறும்பிடமிருந்து விடாமுயற்சியை நாம் கற்றுக்கொள்ள வேண்டும்.

எறும்பின் இன்னொரு குணமும் நமக்கெல்லாம் பாடம். எப்போதுமே, எதிர்காலத்தைப் பற்றிச் சிந்தித்து, இப்போதே அதற்கு தன்னை தயார்ப்படுத்திக் கொள்வதுதான் அது! இளைஞர்கள், இன்டர்வியூவுக்குப் போவதற்கு ஒரு சில நாட்கள் முன்னால் மட்டுமே தங்களைத் தயார்ப்படுத்திக் கொள்ள ஆரம்பித்தால் வெற்றி நிச்சயமில்லை. எனவே, திட்டமிட்டுத் தயார்ப்படுத்திக் கொள்ள வேண்டியது அவசியம்.

### சிகரத்தை நோக்கி...

**எ**வரெஸ்ட் சிகரத்தின் மீதேறி, உலக சாதனை புரிந்த டென்சிங் மற்றும் ஹில்லாரி முதல் முயற்சியில் தோல்வி கண்டவர்களே! அடுத்த முறை, மூன்றாம் முறையும் முயற்சி செய்தார்கள்; அப்போதும் தோல்வியே! மனம் தளராமல், நான்காவது முறையும் தங்கள் மலையேற்றத்தைத் தொடர்ந்தார்கள். எவரெஸ்ட் சிகரத்துக்குக் கீழே நின்று கொண்டு, "எவரெஸ்ட் சிகரமே! நீ மூன்று முறை எங்களை ஜெயித்து விட்டாய். ஆனால் இந்த முறை நாங்கள்தான் வெற்றிபெறப் போகிறோம்; உன் தலையில், எங்கள் வெற்றிக்




கொடியை நாட்டாமல், நாங்கள் திரும்பப்போவதில்லை" என்று தன்னம்பிக்கையுடன் சவால் விட்டார்கள்; ஜெயித்துக் காட்டினார்கள். எனவே, வாழ்க்கைப் பாதையில் தோல்விகள் வருவது சகஜம். ஆனால், அந்தத் தோல்விகளால் நாம் மனம் சோர்ந்து விடக் கூடாது.

### எங்கே தவறு?

நம்முடைய தோல்விக்குக் காரணம் மற்றவர்கள்தான் என்று பிறர் மீது பழி சுமத்தக் கூடாது. அது நம் வெற்றிக்கு வழி வகுக்காது.




நமது தோல்விக்குக் காரணம் என்ன என்று ஆராய முற்பட வேண்டும். நாம் எங்கே தவறு செய்தோம் என்று சுய பரிசோதனை செய்ய வேண்டும். கேட்ட கேள்விகளுக்கெல்லாம், சரியானபடி பதில் சொல்லியும், நம்மால் வெற்றி பெற முடியாமல் போனால், வேறு எங்கே தவறு செய்தோம் என்று அலசிப் பார்க்க வேண்டும்; நம்முடைய நண்பர்களிடம், வழிகாட்டிகளிடம் மனம் திறந்து பேசி அவர்கள் சொல்லும் ஆலோசனைகளைக் கடைபிடித்து வெற்றி பெற மீண்டும் முயல வேண்டும். சிறுசிறு விஷயங்களில் கூட கவனம் செலுத்தி, அவற்றைத் தக்க இடத்தில், தக்க முறையில் பயன்படுத்தி, வெற்றிகாண முயல வேண்டும்.

### பாசிடிவ் ஃபார்முலா!

ஒரு கண்ணாடி டம்ளரில் உள்ள தண்ணீரில் ஒரு சிறு கல்லை வேகமாக வீசினாலும் அது உடைந்து விடுகிறது. ஆனால், கடலுக்குள் ஒரு பெரிய கல்லைப் போட்டாலும், ஒன்றும் ஆவதில்லை. நம்முடைய வாழ்க்கையில் தோல்வி என்ற கல் வந்து விழுகிறபோது, நம் மனது கண்ணாடி டம்ளர் போல் நொறுங்கிப் போய்விடக் கூடாது. மாறாக கடல் போல பரந்து, அதனை ஏற்றுக் கொண்டு, பாதிப்புக்குள்ளாகாதபடி இயங்க வேண்டும்.

### வெற்றி உங்களுக்கே!

சகல விதமான சக்திகளையும் பெற்ற அனுமாருக்கே அதனைப் புரிய வைக்க ஒரு ஜாம்பவான் தேவைப்பட்டார். நீங்கள் உங்களின் முழுமையான சக்தி என்ன என்பதைப் புரிந்துகொள்ள முயலுங்கள்; வெற்றி இலக்கை நிர்ணயம் செய்து கொள்ளுங்கள்; அதை நோக்கிய




பயணத்தில், எத்தனை தடைகள் வந்தாலும் மனச் சோர்வு அடைந்து விடாதீர்கள். **வெற்றி உங்களுக்கே!**




"அம்மா! இன்னிக்குக் கேம்பஸ் ரெக்ரூட்மென்ட்டுக்கு வந்திருந்தாங்க! அவங்க கம்பெனியில 2025-ஆம் வருஷத்துக்கு என்னை எக்ஸிகியூட்டிவா செலெக்ட் பண்ணிட்டாங்க!" என்று தனது ஸ்கூல் யூனிஃபார்மைக் கழற்றிக் கொண்டே சந்தோஷமாக சொல்லுவது கே.ஜி. வகுப்பில் படிக்கிற ஒரு வாண்டு _ இது இன்டர்நெட் ஜோக்!

கல்லூரியில் படிப்பை முடிப்பதற்கு முன்பாகவே; கையில் அப்பாயிண்ட்மென்ட் ஆர்டர்! - இது இன்று நடைமுறை!

ஐ.ஐ.டி., ஐ.ஐ.எம். போன்ற முதல் நிலை கல்வி நிறுவனங்களில் படிக்கும் மாணவர்கள் மட்டுமின்றி, சிறு நகரங்களில் உள்ள கல்லூரிகளில் படிக்கும் மாணவர்களுக்குக்கூட கேம்பஸ் ரெக்ரூட்மென்ட் வாய்ப்புகள் இன்று கிடைத்துக் கொண்டிருக்கின்றன. இந்த கேம்பஸ் ரெக்ரூட்மென்ட்களில் வெற்றி பெறுவது எப்படி என்பது பற்றி விளக்கிச் சொல்கிறார் மாஃபாய் மனிதவள நிறுவனத்தின் சாரா நடாஷா:

*'சமீபகாலமாக கேம்பஸ் ரெக்ரூட்மெண்ட்கள் அதிகரித்திருப்பதற்கு என்ன காரணம்?'*

"இன்று அந்த அளவுக்குத் தேவை இருக்கிறது. தகவல் தொழில் நுட்பத் துறையிலும், கம்ப்யூட்டர் சாஃப்ட்வேர் துறையிலும் இஞ்சினியரிங் படித்த மாணவர்கள் மட்டுமின்றி, பி.ஏ., பி.எஸ்ஸி. படித்த மாணவர்களுக்கும் கூட வேலைவாய்ப்புகள் பெருகியுள்ளன. ஒவ்வொரு நிறுவனத்திலும் நூற்றுக்கணக்கில், ஆயிரக்கணக்கில் பணியாளர்கள் தேவைப்படுகிறார்கள். முன் அனுபவம் இல்லாவிட்டாலும், தேவையான அடிப்படை அறிவும், பணியாற்றும் துடிப்பும் இருந்தால் போதும் என்று நிறுவனங்கள் நினைக்கின்றன. எனவே, நிறுவனங்கள் கல்லூரிகளுக்கே சென்று, மிகச்சிறந்த மாணவர்களைத் தேர்வு செய்து, படிப்பை முடிப்பதற்கு முன்பாகவே அப்பாயிண்ட்மென்ட் ஆர்டரைக் கையில் கொடுத்து விடுகின்றன."


• சாரா நடாஷா

கல்லூரி

*வேலைக்குத் தேர்வு செய்ய கல்லூரிகளுக்கு வரும் நிறுவனங்களின் அணுகுமுறை என்ன?*

"படிப்பில் சிறந்து விளங்க வேண்டும் என்பதுதான் அனைத்து நிறுவனங்களும் எதிர்பார்க்கும் முக்கியமான அடிப்படைத் தகுதி. ஆனால் அது மட்டுமே போதாது. எந்தெந்த நிறுவனங்கள் எந்தெந்த கல்லூரிகளுக்கு வருகின்றன என்பதைக் கல்லூரிகளும், நிறுவனங்களும் கலந்தாலோசனை செய்து முடிவு செய்கின்றன. மாணவர்களது கம்யூனிகேஷன் திறமைதான் முதல் கட்டமாகப் பரிசோதிக்கப்படுகிறது. பெரும்பாலும் இதற்கு இரண்டு வழிமுறைகள் கடைப்பிடிக்கப்படுகின்றன. நிறைய மாணவர்களை ஒரு கூடத்தில் அமரவைத்து, ஒவ்





கேம்பஸ் சர்ச்

வொருவரையும் தங்களை சுய அறிமுகம் செய்து கொள்ளச் சொல்வார்கள். ஒவ்வொரு மாணவரும் தங்களுக்குத் தரப்படும் சுமார் ஒரு நிமிட நேரத்தில் தங்களைப் பற்றி சில வரிகள் ஆங்கிலத்தில் சொல்ல வேண்டும். இந்தச் சுற்றில் கிடைத்த மிகக் குறுகிய நேரத்தில் தங்களைப் பற்றிய பொதுவான தகவல்களுடன், தங்களது பிரத்யேகத் திறமைகளையும், ஆர்வங்களையும் குறிப்பிடும் மாணவர்களுக்கு அடுத்த சுற்றுக்குத் தேர்வு செய்யப்படும் வாய்ப்புகள் அதிகம். வேறு சில நிறுவனங்



## ...யைத் ...தேடி...

கள், சுய அறிமுகத்துக்குப் பதிலாக, ஏதாவது ஒரு தலைப்பைக் கொடுத்து அதைப் பற்றி ஒரு நிமிட அளவுக்குப் பேசச் சொல்வார்கள். இந்த இரண்டு யுக்திகளும் சிறந்த சிலரை தேர்ந்தெடுக்கும் வழி என்பதை விட, ஏராளமான மாணவர்களிலிருந்து கணிசமானவர்களைக் கழித்துக் கட்டும் உத்தி என்று சொல்லலாம்."

***எழுத்துத் தேர்வு எதுவும் நடத்த மாட்டார்களா? அடுத்தடுத்து என்னென்ன தேர்வுகள்?***

"அடுத்த கட்டமாக எழுத்துத் தேர்வு நடத்துவார்கள். இது வெறுமனே புத்தக அறிவினைச் சோதிக்கும் தேர்வாக இருக்காது. பொது அறிவுக்கும் அப்பாற்பட்டு, மாணவர்களின் அறிவுக் கூர்மையைச் சோதிப்பதாக இருக்கும்.

அடுத்த கட்டமாக, குழு விவாதம் நடத்துவார்கள். ஒவ்வொரு மாணவரும் அதில் எப்படி பங்கேற்கிறார்கள் என்பதை உற்றுக் கவனிப்பார்கள். ஒரு விஷயத்தைக் கொடுத்து, அது குறித்து கலந்துரையாடல் நடக்கும்பொழுது ஒருவர் ஒதுங்கியே இருக்கிறாரா, தன் கருத்தை தெளிவுபட எடுத்துரைக்கிறாரா, மற்றவர் கருத்துகளுக்கு செவிசாய்கிறாரா, எந்த அளவுக்கு மதிப்பு அளிக்கிறார், அடுத்தவர் கருத்தை மறுக்கிறபோது, அவரது குரல் எப்படி இருக்கிறது, மற்றவர்கள் மீது தனது ஆதிக்கத்தை செலுத்த முயற்கிறாரா, அல்லது மற்றவர்கள் கருத்தை மறுத்துப் பேச பயப்படுகிறாரா என்று பல்வேறு கோணங்களிலும் அந்த கலந்துரையாடல் கவனிக்கப்படும்.

இன்னொரு முக்கியமான விஷயம், ஒரு குழுவாக இணைந்து வேலை செய்யும்போது ஒருவருக்கு, மற்றவர்களை

## நெட்டின் கதவைத் தட்டு!

இன்று ஏராளமான வேலை வாய்ப்புகளை ஏற்படுத்தித் தரும் இணைய தளங்கள் வந்துவிட்டன. நம்மைப் பற்றிய தகவல்களைப் பதிவு செய்துவிட்டால், வேலை நம்மை தேடி வரும். சில இணைய தளங்கள், இலவசமாகவே தகவல்களைப் பதிவு செய்கின்றன. சில தளங்கள் குறிப்பிட்ட கட்டணத்தை வசூலிக்கின்றன. தகவல்களை நேரிடையாக இந்த இணைய தளங்களில் நாமே பதிவு செய்துவிட முடியும். கட்டணத்தை கிரெடிட் கார்டு மூலமாகவோ, DD மூலமாகவோ அனுப்பலாம். பல இணைய தள வேலை வாய்ப்பு நிறுவனங்கள், வேலை தேடுபவர்களின் பெயர்களை இலவசமாகப் பதிவு செய்து கொண்டு, நிறுவனங்களிடமிருந்து கட்டணம் வசூலித்துக் கொள்கின்றன.



அனுசரித்துப் போகும் குணம் இருக்க வேண்டும். அங்கே அவரது தலைமைப் பண்பு சோதிக்கப்படுவதில்லை. இதை கவனத்தில் கொண்டு, அதற்கேற்ப நடந்துகொள்ள வேண்டும்."

**நிறுவனங்களின் எதிர்பார்ப்புக்கேற்ப மாணவர்கள் தங்களைத் தயார்ப்படுத்திக் கொள்ள கல்லூரிகள் எந்த விதத்தில் உதவி செய்கின்றன?**

"சில கல்லூரிகள் மட்டுமே, இந்தச் சவாலை எதிர் கொள்வதற்குத் தங்கள் மாணவர்களைத் தயார்ப்படுத்துகின்றன. பெரும்பாலான கல்லூரிகளில், அதற்குப் போதுமான வசதிகள் இல்லை. எனவே, அந்தப் பணியை எங்களைப் போன்ற மனிதவள நிறுவனங்களிடம் ஒப்படைத்து விடுநார்கள். நாங்கள் தமிழ்நாட்டின் பல்வேறு கல்லூரிகளுக்குச் சென்று, கேம்பஸ் ரெக்ரூட்மென்ட்டுக்கு, மாணவர்களைத் தயார் செய்யும் விதமாகப் பயிற்சி வகுப்புகளை நடத்தி வருகிறோம். இதற்கு மாணவர்கள் மத்தியில் மனம் நிறைந்த உற்சாகமும் நல்ல வரவேற்பும் உள்ளது. கல்லூரி நிர்வாகங்களும் நன்கு ஒத்துழைப்பு கொடுக்கிறார்கள்.










# வேலை ரெடி நீங்க ரெடியா?

சமீபகாலமாக செய்தித்தாள்களில் 'வாக்-இன்' இன்டர்வியூ விளம்பரங்கள் அதிகமா வெளியாகிக்கிட்டிருக்கு. 'இன்ன தேதில, இந்த முகவரிக்கு, இத்தன மணியிலிருந்து இத்தனை மணிக்குள்ள நேர்முகத் தேர்வுக்கு வாங்க'ன்னு ரொம்ப பேரு அழைப்பு விடுக்கறாங்க.

எல்லாமே பணம், ஃபாஸ்ட் ஃபுட் யுகம். நெனச்ச உடனே காரியம் நடக்கணும்ங்கற நிலைமை. பொறுமைங்கறது சுத்தமா காணாமப் போச்சு. வாக்-இன் இன்டர்வியூ சர்வ சகஜமாச்சு. இதுக்கு நம்மைத் தயார்படுத்திக்கலாமா?

- உங்க பயோ டேட்டா, ஃபோட்டோ, சர்டிபிகேட்ஸை எல்லாம் எப்பவும் ரெடியா கைவசம் வச்சுக்கங்க. அப்பத்தான் இன்டர்வியூ சமயத்துல வாக் பண்ணாம ரன் பண்ணலாம்.
- விளம்பரத்துல கம்பெனியின் பெயர், அட்ரஸ் இருந்தா, அக்கம் பக்கத்துலயோ, ஃப்ரண்ட்ஸ்கிட்டயோ, அந்தக் கம்பெனியப் பத்தி முன்கூட்டியே விசாரிச்சு வச்சுக்கங்க.
- உங்க கல்வித் தகுதி, வேலை அனுபவம் பற்றி விசாரிப்பாங்க. தகவல்களைத் தயார்நிலையில 'பளிச்'சுன்னு பகிர்ந்துக்கத் தயங்காதீங்க.
- உங்களப் பத்தின சான்றிதழ் வழங்கக்கூடிய ஓரிரு நபர்களோட பெயர், முகவரி, ஃபோன் நம்பர் போன்ற விவரங்களை ரெடிமேடா வச்சுக்கங்க. அவங்களோட ரெஃபரன்ஸ் உங்களுக்கு ஒரு ப்ளஸ் பாயின்ட். மறக்காம அந்த நபர்கள்கிட்ட சொல்லி பர்மிஷன் வாங்கிக்குங்க.
- கிடைக்கிற ஒரு சில நிமிஷங்கள்ல உங்களப் பத்தியும் நீங்க பார்க்கப் போற வேலையப் பத்தியும் அதுக்கு நீங்க எப்படி தகுதியானவர் என்பது பத்தியும் தெளிவா, சுருக்கமாச் சொல்லுங்க. பட்டுக் கத்திரிச்ச மாதிரி சொன்னா சட்டுபுட்டுனு வரும் குட் நியூஸ்!
- பொறுமை... பொறுமை... பொறுமை..! ஏகப்பட்டவங்க வந்து காத்திருக்கும் இந்தத் தேர்வுல உங்களுக்கு அழைப்பு வரும் வரை நெளியாம, கோணாம, சிணுங்காம, பொறுமையாக் காத்திருங்க.
- எதுக்கும் தயங்காதீங்க. சம்பளம், சலுகை இது போன்ற விஷயங்கள்ல டவுட்ஸ் இருந்தா பணிவா, சாதுர்யமாக் கேட்டுத் தெரிஞ்சுக்குங்க.







# 'பிரெயின்

இந்தியாவில் படித்து, அயல்நாடுகளில் குடியேறிவிடுவதனால் நம் நாட்டுக்கு ஏற்படும் அறிவு இழப்பை 'பிரெயின் டிரெயின்' என்கிறார்கள். வெவ்வேறு பொறியியல் கல்லூரிகளில் படித்துக்கொண்டிருக்கும் நான்கு மாணவ, மாணவியர், இந்த விஷயம் குறித்து கலந்துரையாடுகிறார்கள்.

**மணிகண்டன் :** "இங்கே படிச்சுட்டு, அமெரிக்காவுக்குப் போறாங்கன்னா, அதுக்கு காரணம் அவங்களோட படிப்புக்கும், தகுதிக்கும் ஏற்ற வேலை இங்கே கிடைக்கலை. புத்திசாலி மாணவர்களை மேலை நாடுகள் சிவப்புக் கம்பளம் விரித்து வரவேற்கறாங்க. அதனால, வெளிநாடுகளுக்குப் போவதை தயவு செய்து குறை சொல்லாதீங்க."

**சஷாங் :** "ஒரு டாக்டரை, இஞ்சினியரை, உருவாக்க இந்த அரசாங்கம் எத்தனை லட்சம் ரூபாய் செலவழிக்குது! நாட்டுல கோடிக்கணக்கான கிராமங்கள்ல பள்ளிக்கூட வசதி இல்லை. ஆனாலும் ஐ.ஐ.டி., மெடிக்கல் காலேஜ்களுக்கு கோடிக்கணக்கில் பணம் செலவழிச்சு, டாக்டர்களை, இஞ்சினியர்களை உருவாக்குது இந்த நாடு. ஏழை மக்கள் கொடுக்கிற வரிப்பணத்துல படிச்சு டாக்டராயிட்டு, அந்த ஏழை கிராம மக்களுக்கு மருத்துவ சேவை செய்யாமல், அமெரிக்காவுக்குப் போய்க் கோடிக் கணக்கில் பணம் சம்பாதிக்கிறதும், அங்கேயே கிரீன் கார்ட் வாங்கிக்கிட்டு செட்டில் ஆகறதும், இந்தத் தாய்நாட்டுக்குச் செய்கிற துரோகமில்லையா?"

**அஸ்வின் :** இதுல முக்கியமான ஒரு விஷயம் இருக்கு. ஐ.ஐ.டி.யோ, மெடிக்கலோ முடிச்சிட்டு, அங்கே போனா அப்படியே வேலை கிடைச்சிடாது. மேற்கொண்டு படிக்கணும். அதுக்குக் கோடிக் கணக்குல செலவாகும். நம்ம நாட்டு மாணவர்களுக்கு, அங்கே இருக்கிற பல்கலைக்கழகங்கள் ஏராளமா ஸ்காலர்ஷிப் தருது. ஆக, அவங்களோட உதவியில மேற்படிப்பும் படிச்சிட்டு, அங்கே இருக்கிற வேலை வாய்ப்புகளையும் பயன்படுத்திக்கிறதுல என்ன தப்பு?



* அஸ்வின்

* சஷாங்




# டிரெயின்' -அன்றும் இன்றும்!

**சுப்ரியா** : இது ஐம்பது சதவிகிதம் தான் சரி. இந்தியாவுல பல்வேறு துறைகளிலும் ஆராய்ச்சிகள் பண்றதுக்கு வாய்ப்புகள் குறைவாக இருப்பதால், அமெரிக்காவுக்கோ, ஜெர்மனி, ஜப்பான் போன்ற வளர்ச்சி அடைந்த நாடுகளுக்கோ ஆராய்ச்சிக்காகப் போறதுல தப்பில்லை. ஆனால், இங்கே கம்ப்யூட்டர் துறையில் படிச்சிட்டு, அங்கே போய் வேலை பார்த்து சம்பாதிச்சுட்டு, அங்கேயே செட்டில் ஆகறதை எதிர்க்கிறேன்.

**அஸ்வின்** : எல்லாரும் அப்படியே வெளிநாடுகளுக்குப் போயிடறதில்லையே! மிகவும் புத்திசாலியான, திறமை மிகுந்த, அதே சமயம் தங்கள் திறமைக்கு ஏற்ற வேலைவாய்ப்புகள் இங்கே இல்லைன்னு நினைக்கிற மாணவர்கள் மட்டும்தானே போறாங்க? அவங்களைத் தடுக்க யாருக்கும் உரிமை கிடையாது. அவங்க போறது தப்புன்னு எந்தச் சட்டம் சொல்லுது?

**சஷாங்க** : இது சட்டப்படி தப்பானது இல்லைதான். ஆனா, ஒரு தார்மீகம் இருக்கே! தாய்நாட்டுடனான உறவை அவ்வளவு சீக்கிரத்தில் உதறிட்டுப் போய்விட முடியாது.

**மணிகண்டன்** : இதுமாதிரி சென்டிமென்ட் எல்லாம் சினிமாவுக்கு வேண்டுமானால் சரியாக இருக்கும். ஆனால் வாழ்க்கைக்கு ஒத்துவராது. இது நம்ம நாட்டுல மட்டும் நடக்கிற விஷயமில்லையே! அமெரிக்காவுல உலகத்தின் பல்வேறு நாடுகளிலிருந்து வந்தவர்கள் செட்டிலாகி இருக்கிறார்கள். குளோபல் வில்லேஜ் என்று பேசுகிற இந்தக் காலகட்டத்தில் 'பிரெயின் டிரெயின்' என்று நாம் கூப்பாடு போட்டுக் கொண்டிருக்கிறோம்.

**சுப்ரியா** : வளைகுடா நாடுகளுக்குக் கூட நம் நாட்டிலிருந்து நிறைய பேர் போய் வேலை பார்க்கிறார்கள். நிறைய பணம் சம்பாதிக்கிறார்கள்; இந்தியாவுக்கு அனுப்பி வைக்கிறார்கள். ஆனால், அவர்கள் அனைவரும் அங்கே போய் அந்த நாட்டு குடிமக்கள் ஆகிவிடுவது இல்லை. ஐந்து வருடங்களோ, பத்து வருடங்களோ வேலை பார்த்துவிட்டு, திரும்பி விடுகிறார்கள். ஆனால் அமெரிக்காவுக்குப் போகிறவர்கள், நிறைய பணம் சம்பாதிக்கணும்; வசதியாக



• மணிகண்டன்

• சுப்ரியா






டீஸ்கஷன்

**போட்டி** இன்டர்வியூவின்போது உங்களிடம் ஒரு கேள்வி கேட்கப்படுகிறது உங்களுக்கு முழுதாக பதில் தெரியவில்லை. என்ன செய்தால் நல்லது? பதில் தெரியாது என்று ஒப்புக்



# பதில் சொல் தோழா!

கொள்ளலாமா? தெரிந்தவரை பதில் சொல்லி, இவ்வளவுதான் எனக்குத் தெரியும் என்று வெளிப்படையாக சொல்லி விடலாமா? இல்லை தெரிந்த விஷயங்களை வைத்து முழுதாய் தெரிந்த மாதிரி சொல்லி சமாளித்து விடலாமா? நீங்களாக இருந்தால் என்ன செய்வீர்கள்? ஒரு போஸ்ட் கார்டில் உங்க பதிலை எழுதுங்க.

'கல்கி-பதில் சொல் தோழா' 47-NP, ஜவாஹர்லால் நேரு ரோடு, ஈக்காடு தாங்கல், சென்னை-32 என்ற முகவரிக்கு அனுப்புங்க. கல்கி 1.4.2007 தேதியிட்ட இதழில் பிரசுரமாகும் ஐந்து சிறந்த பதில்களுக்கு சன்மானம் உண்டு.

முடிவு தேதி : 15.3.2007.

வாழணும்; அங்கேயே செட்டில் ஆகிவிட வேண்டும் என்ற லட்சியத்துடன்தான் இங்கிருந்து புறப்படுகிறார்கள். அந்த எண்ணம்தான் தவறு. அவர்களுக்கு தேச நலனைவிட, சொந்த லாபங்கள்தான் பெரிசு. அவர்களுள் பலர் சுயநலக்காரர்கள்!

**மணிகண்டன்** : உங்களுக்கு ஒரு விஷயம் தெரிந்திருக்கும். ஐ.ஐ.டி.யின் முன்னாள் மாணவர்களில், இப்போதும் இந்தியாவிலேயே இருப்பவர்கள் தாங்கள் படித்த ஐ.ஐ.டி.க்குப் பெரிசாக ஒன்றும் செய்துவிடவில்லை. ஆனால் அமெரிக்காவில் படிக்கும் முன்னாள் ஐ.ஐ.டி. மாணவர்கள்தான் ஐ.ஐ.டி. மேம்பாட்டுக்காகவும், வளர்ச்சிக்காகவும் கோடிக் கணக்கில் நன்கொடை அளித்திருக்கிறார்கள். 'அவர்களுக்கு நாட்டுப் பற்றில்லை; சுயநலம்' என்றெல்லாம் பேசுவது தவறு.

**நிருபர் சந்திரமௌளி** : எந்த ஒரு விஷயமாக இருந்தாலும் விவாதிக்க ஆரம்பித்தால் தீர்ப்பை கலபத்தில் எழுதிவிட முடியாது. மாற்று கருத்து இருந்து கொண்டே தான் இருக்கும். 2006ஆம் ஆண்டு பல்வேறு ஐ.ஐ.டி.களிலும் படித்து பி.டெக். பட்டம் பெற்ற 3980 இளைஞர்



களில் வேலை தேடி அயல்நாடு சென்றவர்கள் வெறும் இருபத்தொரு நபர்கள்தான். ஆக, இங்கே பெருகிவரும் சிறந்த வேலை வாய்ப்புகளால் நம் நாட்டு அறிவு நமக்கே பயன்படுவது அதிகரித்து வருகிறது.

ஜெயிக்கப் போவது நீங்க...
தொகுப்பு : **எஸ்.சந்திரமௌளி**
படங்கள் : **பொள்ளாச்சி சுந்தரம்**








# உன்னையறிந்தால்...

**அமிர்தா பெசன்ட் ராஜ், மனவியல் வல்லுனர். 'பெசன்ட் ராஜ் கன்சல்டன்ட்ஸ்' என்ற தனியார் வேலை வாய்ப்பு ஆலோசனை நிறுவனத்தின் இயக்குநர். இவர் என்ன சொல்கிறார்?**

"எங்களுடைய பல வருட அனுபவத்தின் அடிப்படையில் நாங்கள் ஒரு மாணவனின் அறிவு, ஆர்வம், ஆளுமை இவை மூன்றையும் மிக நுணுக்கமாக அளவிடக்கூடிய ஒரு டெஸ்ட்டை உருவாக்கியிருக்கிறோம். பத்தாம் வகுப்பு படிக்கும் மாணவர்கள் இந்த டெஸ்ட்டை எடுத்துக் கொள்வதன் மூலமாக அந்த மாணவன் அல்லது மாணவியின் அறிவுக் கூர்மை எப்





படிப்பட்டது, எவற்றின்மீது ஆர்வம் அதிகம்? எவற்றில் துளியும் ஆர்வமில்லை, எப்படிப்பட்ட வேலைக்குச் செல்ல பிடிக்கும் என்றெல்லாம் அலசி ஆராய்வோம். அதன்மூலம் அந்த மாணவனின் இயல்பான ஆர்வம் எதில் இருக்கிறது, இயற்கையான மனப்பாங்கு என்ன என்பதை அறிந்து கம்ப்யூட்டர் ரிப்போர்ட் கொடுப்போம். இதுவே அந்த மாணவனின் மேற்படிப்புக்கு வழி வகுக்கும்.

எங்களிடம் வேலை வேண்டி பதிவு செய்யும் இந்தத் தலைமுறை மாணவர்களிடம் ஒரு முக்கியமான குறைபாட்டை நான் கவனிக்கிறேன். "எந்த வேலையானாலும் நான் செய்யத் தயார்" என்கிறார்கள். ஒருமுறை என்னிடம் அப்படிச் சொன்ன ஓர் இளைஞனிடம், என் கையில் இருந்த பேனாவைக் கொடுத்து "இந்த பேனாவை என்னிடம் நீ விற்க வேண்டும்; எங்கே உன் விற்பனைத் திறமையைக் காட்டு, பார்க்கலாம்" என்று கூறினேன். அவன், திகைத்துப்போய் உட்கார்ந்திருந்தான். "நீதான் எந்த வேலையானாலும் செய்யத் தயார் என்று கூறினாயே?" என்றபோது "சொன்னேன்; ஆனால்..." என்று இழுத்தான். எல்லாராலும், எல்லாவிதமான வேலைகளையும் செய்துவிட முடியாது. பேசவே தயங்கும் குணமுடையவரை, விற்பனைப் பிரதிநிதியாக நியமித்தால், அவரால் எப்படி விற்பனை இலக்குகளை சாதிக்க முடியும்?

இளைஞர்களே! உங்கள் குணாதிசயங்களின் அடிப்படையில், உங்களின் பலம் எது, பலவீனம் எது, உங்களுக்குக் கஷ்டமானது எது, எதில் ஆர்வம் என்று சுய பரிசோதனை செய்துகொண்டு அதன் அடிப்படையில் எந்தத் துறையில் நுழைந்தால் உங்களால் சாதிக்க முடியும் என்று புரிந்துகொண்டு அந்தத் துறையில் நுழையுங்கள். நீங்களும் சாதனை மனிதர் ஆகலாம்" என்கிறார்.






# டியர் சமீர்

நசுருதீன்,
பெங்களூரு

வெற்றிகரமாக நீ பட்டப் படிப்பை முடித்ததற்கு வாழ்த்துக்கள். பெங்களூரில் ஏதாவது வேலை கிடைக்குமா என்று கேட்டு நீ அனுப்பிய பயோ-டேடாவைப் பார்த்தேன். அதில் வெகு சாதாரணமான வகையில் உன்னை பற்றிய விபரங்களைக் கொடுத்திருக்கிறாய். அத்தகைய பயோ-டேடாக்கள் இன்றைய போட்டிகள் நிறைந்த யுகத்தில் எடுபடாது.

சுருங்கச் சொல்லி விளங்க வைப்பது என்பது ஒரு கலை. எனவே உன் பயோ-டேடாவை எழுதுகிறபோது, பக்கம் பக்கமாக நீட்டிக் கொண்டுபோகாமல், சுருக்கமாக எழுது. அதேசமயம் சுருங்கச் சொல்கிறேன் பேர்வழி என்று தந்தி பாஷையில் சொல்லிவிடக்கூடாது. அவசியம் என்றாலொழிய பெற்றோர்கள் மற்றும் உடன் பிறந்தவர்கள் குறித்த தகவல்களும் தேவை இல்லை.

ஒருவர் பதினைந்து வருடங்களில் ஏழெட்டு கம்பெனிகளில் வேலை பார்த்திருக்கிறார் என்றால், தகவல்கள் கடைசியாக வேலை பார்த்ததிலிருந்து ஆரம்பித்து, பின்னோக்கி அமைவது நல்லது. காரணம், இதற்கு முன்பு எங்கே வேலை பார்த்தார் என்பதில்தான் வேலைக்கு விண்ணப்பிக்கும் நிறுவனம் ஆர்வமாக இருக்கும். அதேபோல, படிப்பு பற்றிச் சொல்லும்போதும், அதிகபட்ச படிப்பில் ஆரம்பித்து, பள்ளிப் படிப்புவரை பின்னோக்கிச் செல்.

பயோ-டேடாவில் சாமானியர்களுக்குப் புரியாத பெரிய பெரிய வார்த்தைகளைப் பயன்படுத்துவதை தவிர்க்க வேண்டும். வரும் விண்ணங்களை முதல்கட்ட பரிசீலனை செய்பவர்கள் கீழதிகாரிகளாக இருப்பார்கள். அவர்களுக்குப் புரியாமல் போகலாம்.

பயோ டேட்டாவை எழுதுகிறபோது, பக்கத்திலேயே ஒரு டிக்ஷனரியை வைத்துக்கொள். ஏதாவது ஸ்பெல்லிங் சந்தேகம் என்றால் உடனே பார்க்கத் தயங்காதே. பயோ-டேடாவில் சிறு தவறு வந்து விட்டாலும் அது உன் இமேஜை பாதிக்கக்கூடும் என்பதை மறக்க வேண்டாம்.

இன்றைய கம்ப்யூட்டர் யுகத்தில், பயோ-டேடாவை யாரும் கையால் எழுதி அனுப்பமாட்டார்கள். கம்ப்யூட்டரில் தயாரித்தாலும் கூட, பளிச்சென்ற எழுத்துக்களில், சீரான இடைவெளி விட்டு, பார்த்தாலே நல்லதொரு எண்ணம் ஏற்படும்படியான லே-அவுட்டில் பயோ-டேடாவை தயார் செய்.

சொல்ல வந்த கருத்து, தெளிவாக, சந்தேகத்துக்கு இடமின்றி சொல்லப்பட்டுள்ளதா என்பதை இன்னும் இரண்டு பேருக்கு படிக்கக் கொடுத்து சரி பார்த்துக் கொள். அதேபோல, மனிதனுக்கு நேர்மை முக்கியம், இல்லாததையும், பொல்லாததையும் இஷ்டத்துக்கு எழுதி ரீல் விடக்கூடாது.

பயோ-டேடாவை, ஒரு கடிதத்துடன் இணைத்து அனுப்புவதுதான் மரியாதை. பயோ-டேடாவுடன் உன் புகைப்படம் ஒன்றையும் இணைத்து அனுப்பலாம். தவறில்லை. நான் மேலே சொன்னவற்றையெல்லாம் கவனத்தில் கொண்டு, உன்னுடைய பயோ-டேடாவை தயார் செய்து உடனே அனுப்பி வை. ஆல் தி பெஸ்ட்!

இப்படிக்கு
நசுருதீன்

You can

# Win 75% Scholarship

on total course fee




## PROVE YOUR INTELLIGENCE & WIN SCHOLARSHIP

**SAT 2007** | **SCHOLARSHIP APTITUDE TEST** | **FOR DESERVING STUDENTS**

இத்தேர்வுக்கு எவ்வித கட்டணமும் கிடையாது!

**அறிவுத்திறனை நிரூபித்து வெல்லுங்கள்!**

### ABOUT THE SCHOLARSHIP APTITUDE TEST

- No Entry fee for SAT.
- SAT question paper comprises of 25 objective type questions from General Knowledge, Science, Geography & Mathematics.
- SAT question paper will be in English / Tamil.
- No age bar to participate in this test.
- Basic Qualification must be 9th Std.

SAT is conducted only once in a year - Don't miss it.

பயிற்சிக் கட்டணத்தை தவணைமுறையிலும் செலுத்தலாம்




**CSC®**

**COMPUTER EDUCATION**

AN ISO 9001 : 2000 CERTIFIED INSTITUTION

Collect FREE admit card from your nearest CSC centres

Registered with the Registrar of Newspaper of India under No.1041/57*Registered No.TN/CC(S)DN/144/06-08-Licensed to post without prepayment under PMG's Licence No.WPP TN/CC(S)DN/70/06-08-Registered as a Newspaper in Srilanka.